உ

கணபதி துணை.

# நாகமசூளப்பநாயகன்
# விறலிவிடு தூது.

இஃது -

* வேலூர் *

## கோனேரிமுதலியாராலும்

* குறட்டூர் *

## கணபதிமுதலியாராலும்

* திருநின்றையூர் *

## பொன்னம்பலமுதலியாராலும்

சென்னப்பட்டணத்தைச்சார்ந்த
பெரியமேட்டு
மரக்கடைத்தொட்டித்தெருவிலிருக்கும் -
தமது, தமிழ்விளக்க அச்சுக்கூடத்தில்,
பதிப்பிக்கப்பட்டது.

தங்களிஷ்டர் - சபாபதி அய்யரால்நிறைவேறினது.

சோபகிருது வரு - ஆனிமீ.

இதன்விலை ரூ, கஉ.

# விளம்பரம்.

| பெயர் - | விலை, ரூ. |
|---|---|
| திருவாசகம் | ங. |
| ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிதூது | கஎ. |
| திருக்கோவையார் | கஎ. |
| விறலிவிடுதூது | கஉ |
| நாலடியார்மூலம் | க. |
| திருப்புகழ் | க. |
| கலிங்கத்துப்பரணி | எ. |
| தாண்டவமாலை | எ |

| பெயர் - | விலை, அணா. |
|---|---|
| நொண்டிநாடகம் | ய. |
| அவிவேகபூரணகுருகதை | ய |
| சீதாவிஜயம் | ய. |
| ஆத்திசூடியுரை<br>கொன்றைவேந்தனுரை<br>வெற்றிவேற்கையுரை<br>பாலபோதம் | அ. |
| கணபதிஆசிரியவிருத்தம்,பழனிமலைவடிவேலஞசிரியவிருத்தம்,சுப்பிரமணியராசிரியவிருத்தம், மணிப்ரவாளப்பதிகம் | அ. |
| பரத்தையர்மாலை | அ. |
| ஆத்திச்சூடியுரை<br>கொன்றைவேந்தனுரை. | ச, |
| அகப்பேய்சித்தர்<br>குதம்பைசித்தர். | பாடல்.ச. |
| இனியாநாற்பது | ச. |

# விளம்பரம்.

| பெயர் - | விலை, அணா |
|---|---|
| தண்டலையார்சதகம் | ச |
| சிவவாக்கியபாடல் | ச |
| சீட்டுக்கவிதிரட்டு | ச. |
| சவுந்தரியந்தாதி | ச. |
| சஷ்டிகவசம் | ச. |
| கருவைப்பையித்துப்பத்தந்தாதி, | ச. |
| இராமபசனபுத்தகம் | ச. |
| ஞானக்கும்மி | ச; |
| கடவுளந்தாதி | ச. |
| நமச்சிவாயமாலை | ரு. |
| கேதாரிநாதர்விரதம் | ரு. |
| மீனாக்ஷியம்மன் கலிவெண்பா, | ங. |
| தாய்மகளேசல் | ரு. |
| சச்சிதாநந்தமாலை | ரு |
| ஆனந்தக்களிப்பு | ரு. |
| தொட்டிகலைசுப்ரமணியர்விருத்தம்,வேதகிரியீஸ்வரர்விருத்தம் | உஉ. |
| வேல்விருத்தம்<br>மயில்விருத்தம் | உஉ |
| ஆரூதாரஊசல் | உ |
| முத்துமாரியம்மன்பதிகம் | உ. |
| புஷ்பவிதி | உ. |
| தணிகாசலஅனுபூதி | உ. |
| கந்தரனுபூதி | உ. |
| மணிக்கடைக்கயிறுசூத்திரம் | உ. |

சென்னப்பட்டணத்தைச்சார்ந்தபெரியமெட்டிலிருக்குந்தமிழ்விளக்கஅச்சுக்கூடத்திலும்,புரசைபாக்கம் வேளாளர்தெருவிலிருக்கும் காவேரிப்பாக்கம்,வீராசாமி முதலியாரிடத்திலும் பலவகைதினிசு தமிழ்புத்தகங்கள் வாங்கிக்கொள்ளலாம்.—

உ

கணபதி துணை.

நன்றாக-

# விறலிவிடு தூது.

## காப்பு.

பொங்குபெருஞ்செல்வப்புகழ்ப்பெரியநாயகமோத் *
துங்கன்விறலிதூதுக்கு-மங்களஞ்சேர் - - *
பஞ்சவருக்ரகங்களைமுற்றைம்பொனெடிங்குன்றிடுகைக்
கஞ்சமலர்க்குஞ்சரமேகாப்பு. - - - *

[விறலிபுகழ்ச்சி.]

கார்பூத்தமேனிக்கருணைத்திருநெடுமால் - *
பார்பூத்தவுந்திபரந்தாமன்-நீர்பூத்த - - க.
வேலைகுமுறக்கடைந்தவேலைதருந்தெள்ளமுதும் - *
ஆலைதருவெண்சாறடுபாகும்-பாலும் - - உ.
கனியுஞ்சருக்கரையுங்கற்கண்டுநாவுக் - - *
கினியபசுந்தேனுமிணக்கித்-தனியாக - - ங.
மத்தித்தெடுத்தமதுரத்துக்கெண்மடங்கு - - *
தித்திப்புக்கேட்போர்செவிக்கேறத்-தத்தைகள்போய்க் ச.
குன்றேறத்தோற்றுக்குயின்மாமரந்தோறுஞ் - *
செல்றேறவானிற்சிறுகுரரி-நின்றேறுதுங்கி - - ரு.
விண்ணேறவந்தரத்தில்விஞ்சையரோற்கனிந்த - *
பண்ணேறப்பாடுமிசைப்பாடினியே-உண்மையருள் - சா.
போதிக்குமெய்த்தவத்தோர்புத்திக்கிடையூறு - *
நாதிக்குமேழிசைக்குநாயகமே-கீதக் - - - எ.
கொழுந்தோடிமன்னவராங்குன்றிற்படரக் - - *
கொழுந்தோடிபாடிவருங்கொம்பே-எழுந்தசிமிழ் அ.
கண்டாராகத்திலொருகாமப்பேயேற்றுவிக்குங் - *
கண்டாராகத்தில்வல்லகாரிகையே-கெண்டைநெடுங் கூ.

கண்சுருட்டியோகர்கருத்தறிவெல்லாஞ்சுருட்டிப் *
பண்சுருட்டிபாடுமுயிர்ப்பாவையே-ஒண்கிரணக் ௰.
காந்தாரக்கொங்கையின்மேற்கைத்தம்புருவணைத்துக் *
காந்தாரமேற்றுங்கனிமொழியே-சேந்தவரி ௰௧.
யம்பகாப்போதிலணங்குழிணங்குழிசைக் *
கும்பகாப்பேர்திரசகும்பமே-தும்புருதன் ௰௨.
பாகரஞ்சிதத்தனியாழ்பட்டுறையிலிட்டயர *
மேகரஞ்சிபாடும்விறலியே-லோகத்திற் ௰௩.
காகவறிவின்றிக்கலந்தனில்வைத்துண்பாரைத் *
தேகியென்பார்க்கீயாததீயாரை-ராகமெனுங் ௰௪.
கள்ளக்கயிறுகொண்டுகட்டியுருட்டிவிழித் *
துள்ளமுனைச்சாட்டைகொண்டுசுண்டியே - தெள்ளமிர்தத்
தீங்குதலைச்சொல்லாற்றிகிலேற்றித்தேட்டையெல்லாம் *
வாங்கிவிடவல்லமதங்கியே-நீங்கிவெறுப் ௰௬
பாணமடவார்க்குமாடவர்க்குநல்லசமா *
தானநிதானவவதானியே-கானவித்தைப் ௰௭.
பாட்டையெல்லாங்கற்றபணிமொழியேநான்பட்ட *
பாட்டையெல்லாஞ்சற்றேபகரக்கேள்-வேட்டமனை ௰௮.

[அவதானிதன்சம்பவந்தொகுத்துரைத்தல்.]

யாட்டியுடன்போட்டிவிளைத்தாட்டிவிட்டபம்பரம்போல் *
நாட்டையெல்லாஞ்சுற்றியதுநாளொருநாள்- தோட்டிதழிப்
பூவுடையான்றென்மதுரைப்புக்கதுவுமங்கேயோர் *
தேவடியாள்கைக்குள்ளாய்ச்சிக்கியதும்-பாவிகிழ ௨௰.
வோரியெல்கைப்பொன்னையுறிஞ்சியதும்போழ்வாய்த்துச் *
சாரிசதிசெய்ததுவும்வைததுவும்-போராடி ௨௧.
மேனைகெடவம்பலத்தில்விட்டதுவும்வாய்ப்பகட்டால் *
ஊனைவிடப்பற்றியெனையோட்டியதும்-பேராசை ௨௨.
அங்கேயிழுக்கமனதாகிவழிகொண்டுபுகல் *
எங்கேயென்றேன்பதூர்க்கேகியதும்-சங்கேந்தும் ௨௩.
திம்மராயப்பெருமாள்செஞ்சரணசேகரனை *
மும்மதமால்யானைமூர்த்தன்னியனை-ரம்ய ௨௪.
கருணாகரனைக்கனயோகவானைப் *
பொருநாவலர்பூஷணனை-இருநிதியைச் ௨௫.

சந்த்ரமுகமந்த்ரதளதந்த்ரகொலுவிந்திரனைச் - *
சிந்தமகுமாரசெயதரனை - முந்து - - ௨௬.
நிலைக்கோட்டையானைநெடுங்கலியைத்தூரத் - *
துலைக்கோட்டுந்த்யாகதுரையை - மலைக்கோட்டில் ௨௭.
ஆளைவைத்துப்பார்க்குமறுபத்துநாலுமன்னர் - *
பாளையத்தைவென்றபடையானை - வாளரசர் - ௨௮.
வெஞ்சமருக்கஞ்சாவிருதுவென்றிவாகனைநம் - *
பெஞ்சநகர்காக்கும்பெருமானை - வஞ்சகர்க்கோர் - ௨௯.
தண்டப்பெரும்புலியைச்சாமித்துரோகரைக்காய் - *
வெண்டயத்தாற்சூரியனைவீரியனை - மண்டலிகர் - ௩௰.
மாகனகங்கப்பமிடும்வாயிலானைப்பெரிய - - *
நாகமகுடேந்த்ரநராதிபனை - யோகனையான் - ௩௧.
பாடியதுமையன்முகம்பார்த்ததுமென்கலிவிட் - *
டோடியதும்பாக்கியம்வந்துற்றதும் - நாடியிங்கே ௩௨.
நால்வந்ததுநடுமதியிலேயிரண்டு - - - *
மால்வந்தனையவிழிமாதேகேள் - தானபரன் - - ௩௩.

[பாட்டுத்தலைவன்புகழ்ச்சி.]

திக்கெல்லாங்கொண்டாடுஞ்செங்கோல்விஜயரங்க - *
சொக்கநாதேந்த்ரதுரைராஜன் - சக்ரபதி - ௩௪.
சேதுபதிபாண்டியகுலதெக்ஷிணசிங்காசனந - *
ராதிபதிமெச்சுநரபாலன் - கோதில் - - ௩௫.
உருப்பான்மைவெண்பிறைமேலூர்வதுதன்கோல - *
மருப்பாகும்பன்றிமலையான் - திரைக்கரத்தில் - ௩௬.
ஆரமணியாரமணியாரமணிவாரிநடு - - - *
வாரியிடுங்குடவமாநதியான் - தார்வேந்தர் - - ௩௭.
வீதிக்குவீதிவிவாகமணிமுரசம் - - *
நாதிக்கும்பாண்டிவளநாட்டினான் - ஆதித்தன் - ௩௮.
தேரூரருணசெயகோபுரநிலைக்குள் - - - *
ஊரூமொனுமொன்பதூரினான் - கூரியபோர் - ௩௯.
வேலைவைக்குஞ்செங்கருங்கண்மின்னரிதயவண்டு - *
மாலைவைக்கும்பூந்தளவமாலையான் - கோல - - ௪௰.
முகமிலங்குபணியணிந்துமுதுகணைந்தகலனைகொண்டு *
தகைதவிர்ந்துநடைபிறந்துசமரடர்ந்து - பகைவர்தங்கள் ௪௧

தலையினின்றுதிமிதிந்திதகுதிதந்தியெனநடஞ்செய் *
துலவிவந்துகண்கதண்டையொலிமிகுந்து - கலகலென்று ௪௨.
கொஞ்சிடச்சதங்கையிட்டகொண்டலொத்திடுந்திறத்த *
வெஞ்சினப்ரசண்டவுக்ரவெண்பரியான் - விஞ்சுகரம் ௪௩.
ஒன்றுபடைத்துவருமோங்கலுக்கொப்பாயிரண்டு *
வென்றிப்பிறைசுமந்தமேகமெனத் - துன்று ௪௪.
மதங்களெனுமூன்றுமாரிசிந்தப்பாகர் *
ஓதுங்கநால்வாயாலுதறி - அதிர்ந்துபொரும் ௪௫.
அஞ்சாருதிரத்தையாறாக்கியோரேழு *
மஞ்சார்புனலைமடுத்துறிஞ்சிக் - குஞ்சரங்க ௪௬.
ளென்பதோரெட்டுமிணையில்லையென்றசத்தி *
ஒன்பதூர்வீதியுலாவியே - வம்புனைப்போர் ௪௭.
பைம்பொன்முடியிடறிப்பத்துநகமுந்தேய்ந்த *
கும்பரணகம்பீரகுஞ்சரத்தான் - அம்புவியில் ௪௮.
காந்துகலிலையவெட்டுங்கண்டகோடாரியைப்போல் *
ஏந்துவெள்ளைப்பக்கறையிடாலினன் - சாய்ந்தோடிக் ௪௯.
குன்றிற்கருதார்குடும்பங்குடியேற *
முன்றிற்குமுறுமணிமுரசான் - நின்றவடி ௫௰.
தூக்கினர்சென்னிதுடிக்கத்துணித்துவிடும் *
ஆக்கினைச்சக்கரம்போலாணையான் - பாக்கியவான் ௫௧.
கற்பகமாம்பட்டையங்கார்கருணையேமணக்கும் *
பொற்கமலப்போன்றமணப்பூரணவான் - பற்றலார் ௫௨.
தண்டார்மகுடந்தடவுஞ்சயவீர *
கண்டாமணிமுழங்குங்காலினன் - மண்டுசமர் ௫௩.
யுத்தகளத்தொன்னாருயிர்மேய்ந்தகுற்றுடைவாள் *
வைத்தணைத்துக்கட்டுமருங்கினன் - கைத்தலத்தில் ௫௪.
ஐந்தருவுமைந்துவிரலாகித்தருவவெனச் *
செந்தமிழ்க்குநல்குமலர்ச்செங்கையான் - பைந்தொடியார்.
பொன்முலையாங்கோட்டிற்புதுக்கலவைச்சேறாட்டி *
மன்மதனூரெழுதுமார்பினன் - நன்மைதரும் ௫௬.
வெற்றிச்சிறுபெண்விளையாடுஞ்சிற்றிலெனச் *
சுற்றியகேயூரமணிதோளினன் - கற்றவராங் ௫௭.

கோக்குலத்தைக்காத்தருளுங்கோபாலர்வேயிசைபோல் *
வாக்குமதுரம்பொழியும்வாயினான்-நாக்குளிரச் - ௫௮.
சொல்விரசங்கடுவர்ப்பென்றுதள்ளியின்பக் - - *
கல்விரசம்பருகுங்காதினான்-வல்ல - - ௫௯.
மருவலரைவெட்டுகின்றவாள்போன்முகத்திற் - - *
கருணையுலவுமலர்க்கண்ணான்-இரவினுடல் - - ௬௰
சாய்த்தமதிமுகத்துத்தையலார்முத்தமிட - *
வாய்த்தமுழுமதிபோன்மாமுகத்தான்-காத்தருளும் ௬௧.
எம்பிராஹோபிலேசரடியெந்நாளும் - - *
செம்பொன்முடிதாங்குமலர்ச்சென்னியான் - உம்பர்தொழும்.
நின்மலனார்வெண்ணீற்றுநெற்றிக்கண்காணாத - *
மன்மதன்காணென்னும்வடிவினான் - தன்னுடைய - ௬௩.
வல்லக்கவார்குலத்தில்வாள்வேந்தர்கண்குளிரப் - *
பல்லக்குமேலுலவும்பாக்கியவான்-வில்லேற்றிக் - - ௬௪.
கைகொண்டுபொற்படியிற்கால்கொண்டுபஞ்சகதி - *
மெய்கொண்டணையப்பரிமேற்கொண்டு-செய்யரண ௬௫.
துங்கதளகர்த்தர்துரைமக்கள்வாள்பிடித்துச் - - *
சிங்கமெனச்சுற்றித்திரண்டுவர-மங்குலெனக் - ௬௬.
கூனன்முதுகொட்டகமேற்கொட்டுகின்றடம்மாரம் - *
யானையின்மேற்பேரியதிர்ந்துவரச்-சேனையொடு - ௬௭.
தாக்குமறுமண்டலிகர்தங்களுக்குச்சென்றுசொல்லுங் - *
கூக்குரல்போல்வீரசின்னங்கொம்பூத-நோக்கும் - ௬௮.
பரிதிபகைக்குப்பகையெழுந்ததென்ன - - *
விருதுகருடாலவட்டம்வீசத்-தரளக்கால் - ௬௯.
வெள்ளைக்கொடியாடைமேகங்கிழித்துவரப் - - *
பிள்ளைப்பிறைபோற்ப்ரகாசிக்க-வெள்ளைவட்டச் - ௭௰.
சித்ரக்குடைகள்செயமாதுக்கிட்டநிழன் - - *
முத்துமணிப்பந்தரெனமொய்த்துவரக்-கைத்தலத்திற் ௭௧.
கத்திபிடித்துவெள்ளிகட்டினதுபாக்கிகொண்டு - *
பத்துலக்ஷங்காலாட்படைநடக்கத்-தத்துபரி - ௭௨.
கொக்குநரையான்கைக்குமரியெனராவுத்தர் - - *
கைக்குளடங்காதுகான்மீற-நெய்க்கவளம் - ௭௩.

கூட்டியிளையூட்டியிருகொம்புகத்திபூட்டிமதம் - *
மூட்டிவிட்டமால்யானைமுன்னடக்கக்-கூட்டமிட்டு - எ௪.

வாரிட்டணிவகுத்துவாதிட்டவேற்றரசர் - *
போரிட்டவெங்களத்திற்போயெதிர்த்து-நேரார்மேற் - எ௫.

சுட்டபீரங்கித்தொனியும்புகையுஞ்சூ - - *
விட்டமுகிலுமிடியுமெனப்-பட்டயங்கள். - - எ௬.

வீசுவதும்வெட்டுவதுமின்னலெனவீரர்சிலை - - *
பூசலம்புமாரிமழைபோற்பொழியத்-தேசப் - - எ௭.

பரதளங்கள்பட்டுருளப்பாய்ந்தபெருஞ்செந்நீர்ப் - *
பிரளயப்ரவாகம்பெருகச்-சிரதலத்தில் - எ௮.

ஆளையிருப்புலக்கையானையடிக்கவிழு - - *
மூளைநுரைத்திரளாய்மொய்த்தோட-வாளாற் - எ௯.

படுந்திரரோதிவரும்பல்லக்குப்பேய்க்கு - - *
விடுந்தோணிபோலுமிதப்பக்-கிடந்துசிலர் - ௮௰.

வேர்த்துப்பரிசைகொண்டுமேன்மூடிச்சென்னியெட்டிப் *
பார்த்துக்கமடமெனப்பதுங்கப்-போர்த்தலையில் - ௮௧.

மந்திரவாள்வேந்தர்மகுடத்துதிர்ந்தரத்நம் - *
இந்திரகோபங்களெனச்சிதறச்-செந்தறுகண் - ௮௨.

வித்தைமிடிதீரவெற்றிப்பயிரேற்றி - - *
வந்துகொலுவிருக்கும்வாள்வீரன்-முந்துபெரும் - ௮௩.

பாதலத்தில்வேரோடிப்பாரிற்படர்ந்துவட - *
பூதரத்திலேறும்புகழினன்-நீதிபரன் - - ௮௪.

சிந்தமகூளேந்த்ரதுரைசிங்காசனாதிபதி - - *
தந்தசௌபாக்கியசம்பன்னன்-செந்துவர்வாய்க் - ௮௫.

காமவடிவேல்விழியார்கைவடியெல்லாமெழுதும் - *
நாமவடிவேற்பெரியநாகேந்த்ரன்-சேமநிதி - ௮௬.

பூராதிபன்வாழ்வையொக்குநவகோடி - - *
நாராயணன்பெரியநாகேந்த்ரன்-சேரலராம் - ௮௭

ஆட்டுக்கூட்டங்களிலோராண்புலிபோற்பாயுநடு - *
நாட்டுக்கூழிற்பெரியநாகேந்த்ரன்-பூட்டுசிலை - ௮௮

அம்பொன்றலீவேனரகுனக்குவீடணு - - *
நம்பென்றமாலபெரியநாகேந்த்ரன்-ஸ்தம்பமென - ௮௯

லோகஞ்சுமப்பதினாலோராயிரமௌலி - - *
நாகம்பொரும்பெரியநாகேந்திரன் - பாகெனுஞ்சொற் ௧௰.
பாவுக்கேறிக்கனகப்பல்லக்கேறிப்புலவோர் - - *
நாவுக்கேறும்பெரியநாகேந்த்ரன் - வாவிதிகழ் - ௧௧.
பெஞ்சநகர்வாழப்பெருஞ்சீர்வளர்ந்தோங்கக் - - *
கஞ்சமலர்மாதுகளிகூர - வஞ்சகமும் - - ௧௨.
பொய்யும்பறந்தோடப்புண்ணியமுந்தண்ணளியும் - *
மெய்யுங்கலந்துவிளையாடப் - பெய்யுமழை - - ௧௩.
வானம்வழங்கமனைவாழ்க்கையோங்கவன்ன - - *
தானம்வழங்கத்தவமோங்க - நான்மறைக்கும் - ௧௪.
நன்னிதியாமேகவண்ணநாதர்திம்மராயர்திருச் - *
சன்னிதியிற்பூசைதழைத்தோங்க - இந்நிலத்தில் - ௧௫.
எங்கோனபிஷேகமேந்துமனுவிஜயானச் - - *
செங்கோலரசுசெலுத்துநாள் - சங்கேந்தும் - ௧௬.

[அவதானிதன்பிறப்பாதிசொல்லல்.]

காரங்கமேனிக்கடவுளிருக்குமந்தச் - - *
சீரங்கத்தேபிறந்தேன்செல்வத்தில் - ஈரைந்தோ - ௧௭.
டாறுவயதினுக்குள்ளாரியமும்வேதமுநா - - *
வேறித்தமிழ்நூலிலக்கணத்தின் - மீறினேன் - ௧௮.
வாலசரஸ்வதியென்வாக்கிற்ப்ரசன்னமதா - - *
நாலுகவித்திறமுநானறிந்து - வேலும் - - ௧௯.
மயிலுமெனச்சொன்னவுரைமாறுமற்சொல்லக் - *
கயிலாடசிங்கிகழற்ற - அயலொருவன் - - ௨௰.
சொன்னவினுச்சொல்லவெதிர்கூதாடப்பின்முதுகு - *
தன்னிலெறிந்தகல்லுத்தானெண்ணப் - பன்னுசது - ௨௰௧.
ரங்கவிளையாட்டுக்கடிபார்க்கச்சொற்புலவோர் - *
தங்கள்கவியையவதானிக்கச் - சங்கத்தில் - - ௨௰௨.
எட்டெட்டெழுத்தாணிக்கேற்றகவிசொல்லவும்யான் - *
அஷ்டாவதானியென்பதாயினேன் - மட்டார் - ௨௰௩.
திருப்பதியிலேலவாசுதேவன்மகளைக் - - *
கருப்புருவவின்பக்கனியை - விருப்பமுள்ள - ௨௰௪.

பூங்காவனத்தைப்பொருத்தமுடன்வேட்டுப் - - *
பாங்கான்வாழ்விற்பயிலுநாள்-ஆங்குசெவ்வந் - ௱௫.
தீசர்திருச்சன்னிதியிலேந்திழையார்தம்மிலொரு - *
தாசிமேல்வைத்தேன்றயவுநான்-நேசமாய் - ௱௬.
இந்தரங்கத்தேதிரிந்தேனின்பரசவல்லியிடத் - - *
தந்தரங்கத்தேதிரிந்தேனாசையால்-அந்தத் - ௱௭.
திரிச்சிராப்பள்ளிக்குச்செல்லாதிருக்கத் - - *
தரிச்சிராதென்மனதுதானும்-ஒருத்தன் - - ௱௮
அறியாச்சிறுவனுடன்யானொருநாளந்த - - *
வெறியார்குழற்பரத்தைவீட்டிற்-பிரியமுடன் - ௱௯.
சென்றிருந்துவந்தேன்றிடுதிடெனவோடிப்போய்க் *
குன்றிருந்தகொங்கைக்குலமனையாட்-குன்கணவர் - ௱௰.
ஓடத்திலேறினாருத்தரியம்போக்கடித்தார் - *
நாடிச்சிரகிரியைநண்ணினார்-கூடவந்த - ௱௰௧.
என்னைச்சவுக்கையில்வைத்தின்பரசவல்லியெனும் - *
பொன்னையாள்வீட்டுக்குப்போய்ப்புகுந்தார்-அந்நேரம்
மிஞ்சிமிஞ்சிப்பேசினாள்வேசிமகளதற்குள் - - *
அஞ்சியஞ்சிப்பேசினாரையங்கார்-வஞ்சியந்த - ௱௰௩.
வீட்டுக்கதவடைத்தாண்மெள்ளமெள்ளக்கொஞ்சினாள் - *
காட்டுப்புறாவோசைகாட்டினாள்-வீட்டைவிட்டு - ௱௰௪.
வந்தார்நம்மையொன்னைவாவென்றார்காவிரியிற் - *
சந்திபண்ணியிக்கரையிற்றாண்டினார் இந்தவூர்க் - ௱௰௫.
கென்மார்க்கஞ்சொல்லாதேயென்றுசொன்னானொன்றந்தத் *
துன்மார்க்கப்பையலெல்லாஞ்சொல்லிவிட்டான்-மன்மம்.
தொடுத்தாள்கடுகடுத்தாள்தூங்குமஞ்சம்விட்டுப் - *
படுத்தாள்பகைஞரைப்போற்பார்த்தாள்-அடுத்தடுத்து ௱௰௭.
வேண்டினேன்குட்டுவெளியாக்குவேனென்னைத் - *
தீண்டாதேயென்றாள்சிராப்பளியில்-ஆண்டவள்பாற் ௱௰௮.
செல்லாயென்றாள்பரத்தைதேடுவாளேயென்றாள் *
சொல்லாதவார்த்தைசிலசொல்லினாள்-இல்லாள் ௱௰௯.
வலிகிடந்தமாற்றமுனைக்குமேலவ்வில் - - *
புலிகிடந்ததூறாய்விடுமென்-றுலகறியச் - ௱௨௰.

[யாத்திரை செய்தமைகூறல்.]

செப்பினுளவ்வையென்றுதேர்ந்தேனிராத்திரியே *
தப்பினேன்கைக்கடங்கத்தக்கதுகொண் - டப்பால் ௱௨௧.

அதிசயங்களானதிலம்பாவுமறிவோம் - . *
நதிகள்பலமூழ்குவோநாமென் - றிதயமாய். - ௱௨௨

வெள்ளைநாவல்பழுக்குமிக்கபதியுந்நரிகள் - - *
துள்ளுபரியானதொருதொன்னகரும் - தெள்ளுதமிழ்- ௱௨௩.

செப்பக்கதவுதிறந்தவூருங்கருங்கல் - - *
கப்பெல்லைவந்தகடற்பதியும் - இப்புறத்திற் - ௱௨௪.

பாங்குடையவாண்டுபனிரண்டுக்கோர்கான்மா - *
மாங்கநீர்பொங்கும்வளப்பதியும் - பூங்குடத்தில் ௱௨௫.

அங்கத்தைமங்கைவடிவாக்கினவூருந்தமிழ்க்குத் - *
தங்கத்தையீந்ததனியூரும் - செங்கருங்கட் - ௱௨௬

காகமெரியக்கனல்வீசுமிமலையும் - - *
யோகங்குழகுசெயுமொண்கிரியும் - வேகமிக்க ௱௨௭.

கான்றுண்டுவெம்முதலைகௌவியுண்டபிள்ளைதனை *
மூன்றுண்டுசென்றழைத்தமூதூரும் - மான்றுனேர் ௱௨௮.

தாசிக்கெழுந்ததனத்தைலிங்கமென்றொருவன் - *
பூசித்துப்பேறுபெற்றபொன்னகரும் - நேசித்து ௱௨௯.

மைந்தனுடலரிந்துமாதவத்தோர்க்கிட்டுவினைப் - *
பந்தமரிந்தோன்பழம்பதியும் - சொந்தமாம் - ௱௩௰.

ஆட்டைப்புலிகாக்குமம்பலமுநாலுவசி - - *
நாட்டிநடுக்குதிக்குநன்னகரும் - காட்டெயினன் - ௱௩௧,

கண்ணைப்பறிகொடுத்தகற்பதியும்வண்ணான்றன் - *
பெண்ணைப்பறிகொடுத்தபேரூரும் - மண்ணுலகில் ௱௩௨.

தீண்டாதாரொச்சில்செழுமறையோர்க்கீந்தாலும் - *
வேண்டாமெனுமேதற்குமெய்ப்பதியும் - மாண்டவர்தங் ௱௩௩.

காதிலுபதேசங்கடவுள்சொல்லும்பதியும் - *
சீதரன்மாயாபுரியுஞ்சேவித்து - நாதிக்குஞ் - ௱௩௪.

சங்கமுகந்தங்கெறிதரங்கமுககங்கையுடன் - *
சங்கமுகதீர்த்தமெல்லாந்தானாடி - அங்கிருந்து ௱௩௫.

கங்குல்பகலாக்கடலோட்டக்கப்பலிலோர் - *
திங்களில்வந்தெய்தினேன்சேதுவினில் - மங்காத் - ௱௩௬.
தனுக்கோடிதர்ப்பசயனம்பணிந்து - - *
மனுக்கோடிசூழ்செந்தூர்வந்தேன் - கனத்த - ௱௩௭.
திருப்பதிகளொன்பதுநான்சேவித்தங்குள்ள - *
அருட்பொலியுந்தீர்த்தமெல்லாமாடித் - தருப்பொலியும்
குற்றாலநெல்வேலிகோதைவில்லிபுத்தூர்வந் - *
துற்றேன்திருச்சுழிகையூர்பணிந்தேன் - நெற்றிவிழித் ௱௩௯
தம்பிரான்பூவணத்தைச்சந்தித்தேன்சங்கேந்தும் - *
எம்பிரான்சோலைமலைக்கெய்தினேன் - பைம்பொற் ௱௪௰.
றலையருவியாடியெங்கள்சங்கத்தழகர் - - *
மலரடியைப்போற்றிமகிழ்ந்தேன் - ஸ்தலமகிமை ௱௪௧.
யானதினாலஞ்சுநாளங்கிருந்தெனங்கேயோர் - *
ஞானியையன்றன்னுடனேநட்பானேன் - மேன்மையீர் ௱௪௨.
சொக்கர்மதுரைதொழுதுவரவேநீரும் - - *
ஒக்கவரவேண்டுமெனவுரைத்தேன் - தக்கோன் - ௱௪௩.
நகைத்தானிவ்வண்ணநடந்தகதையுண்டு - - *
தொகுத்தமன்றவேதியரேசொல்வேன் - மிகுத்தபுகழ் ௱௪௪.

[ஞானியார்நல்வழியுரைத்தமைகூறல்.]

மேவிச்சிறந்தகொந்திவேந்தனொற்றியூர்த்திருநாள் - *
சேவிக்கப்போகமனஞ்சிந்தித்தான் - தாவில் - ௱௪௫.
அமைச்சனங்கேசென்றக்காலங்கொருத்திவல்லி - *
உமைச்சதிசெய்வாளென்றுரைத்தான் - அமைச்சனுரை ௱௪௬.
மிஞ்சிநடந்தானந்தவேசைகைக்குட்சிக்கினான் - *
வஞ்சிமருந்தான்மதிகெட்டான் - குஞ்சரமும் - ௱௪௭.
நாடுநகருநவநிதியும்வாங்கினாள் - - - *
ஓடுங்குழையுமாவோட்டினாள் - ஆடுகின்ற - ௱௪௮.
கூத்தாடிகள்வன்போற்கோலம்பூண்டாடுவதைப் - *
பார்த்தீரிலேயோசொற்பாவலீர் - வாய்த்த - ௱௪௯.
கறைக்கண்டர்தென்மதுரைகாணவென்றாலங்கோர் - *
தொறட்டுண்டதனையான்சொல்வேன் - பொறுத்தகசம் ௱௫௰.

[மதனாபிஷேகத்தின்பிறப்புணர்த்தல்.]

அஷ்டதிக்குஞ்சூழ்கோயிலாலவாய்ச்சொக்கருக்குத் - *
தட்டடெடுக்குந் தழியிலாள் - வட்டமுலை - ௱௫௧.

மாணிக்கமாலையெனுமங்கையொருபெண்ணடிதன் - *
காணிக்குத்தேடக்கருத்தாகி - ஊணைத் - - ௱௫௨.

தறைமெழுகியுண்டுத்தவங்கிடந்துமெந்தக் - - *
குறைகளெனக்குறிகள்கேட்டும் பெறுதவற்குச் - ௱௫௩.

செப்புத்தகடெழுதிச்செம்பொற்கழுத்திலிட்டும் - *
கெர்ப்பத்துக்காமருந்துகிண்டியுண்டும் - தப்பாத் - ௱௫௪.

திருவனந்தல்சேவித்துஞ்செண்பகப்பூவாசம் - *
மருவனந்தநந்தனங்கள்வைத்தும் - திரையுடலை - ௱௫௫.

வேற்றொருவர்கண்டுவிரும்பாதநாள்தானூழ - - *
காற்றடிக்கப்பூத்தகதைபோலச் - சாற்றும் - ௱௫௬

அரிவைதெரிவைகடந்தப்பானடக்கும் - - *
பருவத்தெகர்ப்பம்படைத்தாள் - நரைவீழ்ந் - - ௱௫௭.

தலையிற்கறுப்பிறங்கிச்சாய்ந்ததெனத்தொங்கு - *
முலையிற்கறுப்புமுதிரக் - கதை - - ௱௫௮.

விழிவேல்குழியமுகம்வெண்மதியமாக - - *
எழின்மேனிபச்சைநரம்பெய்தத் - தழைதருஞ்சூல் ௱௫௯.

கொண்டவயிறுபெருஞ்சைக்கூளேந்த்ரன்சத்திரத்தில் - *
உண்டுவருவோர்வயிற்றைபொப்பாகத் - தண்டேன் ௱௬௰.

அளிக்குடிக்குந்தாராளரும்புளியங்காய்க்கும் - *
புளிக்குடிக்குமுன்னமிச்சைபூண்டாள் - களிக்கவயிற் ௱௬௧.

றூடுதரித்தபிள்ளைக்குள்ளாவார்வாயிலலவிப் - *
போடுவதைத்தன்வாயிற்போட்டறிந்தாள் - கூடிவந்த ௱௬௨.

மாதமொருபத்தாய்வயிறுளைந்துபெற்றாளவ் - - *
வேதனையான்மூர்ச்சையாய்மெய்சோர்ந்தாள் - தாதிமார்.

பெண்ணென்றார்காதிற்பிழிந்தமருந்ததுபோல் - *
துண்ணென்றெழுந்துதுயர்தீர்ந்தாள் - வண்ணமணிப் ௱௬௩.

பொற்றொடிக்கைமங்கைநல்லாள்பொன்காய்க்கும்பூடொன்
பெற்றதுபோலீன்றெடுத்தபெண்கொடியை - மற்றுளார். [று

[மதனாபிஷேகத்தின்வளர்ப்புணர்த்தல்.]

எந்தியிருகையாலெடுத்துநறுநீராட்டிப் - - *
பூந்துகிலான்மெய்துவட்டிப்போற்றினார்-வாய்ந்தசங்கிற்.
சேனையுடன்வஞ்சத்திருட்டுமருட்டுமவ - - *
தானப்புரட்டுந்தனப்பறிக்க-மானிடர்க்குச் - ௱௬௭.
செய்யுங்கபடமகாதித்திரிப்புமாகாசப் - - *
பொய்யுங்கலந்துபுகட்டினாள்-செய்யபசுந் - ௱௬௮.
தேனேகனியேதெவிட்டாததெள்ளமுதே - *
மானேயென்கண்ணேமரகதமே-நானீன்ற - ௱௬௯.
பொன்னேயெனவெடுத்துப்பொற்குறங்கின்மீதேற்றி - *
மின்னேரிடையாள்விழிபரப்பி-நன்னுதலிற் - ௱௭௰.
பாப்பிட்டசொல்லிவெள்ளிப்பட்டமெனவெண்ணீற்றுக் *
காப்பிட்டாள்சிற்றடிக்குங்காப்பிட்டாள்-சேப்பிட்ட ௱௭௧.
செய்க்குவளைக்கண்மயிலேசெம்பொன்னுள்ளபேர்களையுன் *
கைக்குள்வளையென்றுவளைகைக்கிட்டாள்-சிக்காப்புள் ௱௭௨.
ஒட்டுக்குளாவதுபோலுள்ளபணக்காரர்களுன் - - *
பொட்டுக்குளாகவென்றுபொட்டிட்டாள்-பொட்டனவே. ௱௭௩
வேந்தர்புதையல்வெளியாக்குமஞ்சனப்போல் - *
வாய்ந்தவடிவேல்விழிக்குமையிட்டாள்-காந்திமுக ௱௭௪
வண்ணக்கமலமதில்வண்டிருந்தாற்போலமகள் - *
கன்னத்தின்மீதோர்கறுப்பிட்டாள்-சொன்னதனம் ௱௭௫.
வீடேறப்பண்டைமுதல்மேலேறத்தன்குடும்பம் - *
ஈடேறப்பொற்றொட்டிலேற்றினாள்தேடியுன்பால் ௱௭௬.
வாராதவராரார்வந்துமடிச்சீலைகொட்டித் - - *
தாராதவராரார்தந்தணையிற்-சேராதார் - ௱௭௭.
ஆராரார்சேர்ந்துனக்குள்ளாசைகொண்டுசுற்றாதார் - *
ஆராராரொன்றுதாலாட்டினாள்-தாராட்டிச் - ௱௭௮.
சீராட்டிமுன்னிருத்திச்செங்கைகொட்டிக்காட்டிமஞ்ச *
ணீராட்டியந்திநிலாக்காட்டிப்-பாரிற் - - ௱௭௯
கிளைப்பெரியநாகேந்த்ரன்கீர்த்தியைச்சொல்வாணர் - *
வளர்ப்பதுபோற்பெண்ணைவளர்த்தாள்-முளைக்குமகள் ௱௮௰

தள்ளிநடந்தாளதுகண்டுதாய்க்கிழவி - - *
துள்ளிநடந்தாள் துயர்தீர்ந்தாள்-பிள்ளையொரு - ௩௮௧,
சிற்றாடைகட்டித்தெருவில்வரக்கண்டுதிட்டி - *
சுற்றமேலேதிட்டிசுற்றினாள்-மற்றுமந்த - ௩௮௨
வட்டிமகண்மழலைவார்த்தையைக்கேட்டாடவரைத் - *
தம்பியென்றுசொல்லத்தலைப்பட்டாள்-அம்புயச்செங் ௩௮௩,
கைக்குவளையிட்டுக்கடகப்பவளமிட்டுத் - - *
தக்கையிட்டகாதிற்றளப்பமிட்டுப்-பக்கத்திற் - ௩௮௪,
கொண்டையிட்டுக்குப்பியிட்டுக்கொப்பிட்டுக்காலில்வெள்ளித்
தண்டையிட்டுச்செம்பொற்சதங்கையிட்டு-வெண்டரள
மாலையிட்டிரட்டைவடஞாண்மருங்கிலிட்டு - *
வேலையிட்டசுட்டிநெற்றிமேலிட்டுக்-கோலச்சிந் - ௩௮௫.
தாக்கிட்டுச்செம்பவளத்தாழ்வடங்களிட்டுவச்ர - - *
மூக்குத்தனுக்கிட்டுமுத்தமிட்டு-நாக்குளிர - ௩௮௭.
வாரிட்டகொங்கைம்தனுபிஷேகமென்னப் - - *
பேரிட்டுலகறியப்பேச்சிட்டாள்-ஆரியமும் - ௩௮௮.
கன்னடமுங்கட்டிக்கரும்புபோலேவடுகும் - *
மன்னுதமிழும்படிப்பித்தாள்-மன்மதவேள் - ௩௮௯

[பருவக்குறிதாய்கண்டமையுணர்த்தல்]

சிற்பரதவல்குற்சிறியாள்வயதேழில். - - *
நற்பரதமெல்லாநடித்தறிந்தாள்-உற்பனமாம் - ௩௯௰.
மோனவித்தையுள்ளமுனிவோரையுமயக்குங் - - *
கானவித்தையெல்லாங்கனகண்டாள்-மேனிக்குள் ௩௯௧.
வாடைமஞ்சள்பூசுவதுமல்லிகைப்பூச்சூடுவதும் - *
ஆடவரைவீட்டுக்கழைப்பதுவும்-ஓடிப் ௩௯௨.
பிலுக்குவதுங்கிட்டநின்றுபேசையிலேமுத்துக் - *
குலுக்குவதுங்கொஞ்சுவதுங்கொங்கைத்-தலைக்கறுட்டையா ௩௯௩.
முந்திகொண்டுவெட்கப்போன்மூடுவதுங்காமுகரை - *
அந்திமட்டும்வைத்துவிளையாடுவதும்-வந்தவரை - ௩௯௪.
வாள்வீச்சுப்போலவரிவிழியால்வெட்டுவதும் - - *
போள்வாய்ச்சிகண்டுடம்புபூரித்தாள்-வேளாணையார் ௩௯௫.

கைக்குள்வசமாகிவந்துகாலைப்பிடிக்குமந்தச் - - *
சொக்குப்பொடிமருந்துஞ்சொல்லிவிட்டாள் - சொக்கர்புது.
மண்டபத்திலே முன்னேவசந்தன்றிருநாளில் - - *
எண்டிசையோர்மெச்சவரங்கேற்றினாள் - ஒண்டொடிக்குச்.
சின்னச்சிமிழாகிச்செப்பாகித்தேங்காயாய் - - *
வன்னத்தனங்கள்வளர்ந்தேற - கன்னிகையாள் - ௱௯௮
தன்னையறிந்தாள்தழுவிலாள்தன்பழைய - - *
பொன்னையொருபக்கம்புதைத்துவைத்தாள் - மன்னவர்கள்.
சுற்றுவதுங்காமுகரைத்தோயமகட்குமணம் - *
பற்றுவதுங்கண்டறிந்தாள்பட்பாத்தி - பெற்றெடுத்த - ௨௱.

[தாய்க்கிழவிபோதிப்புணர்த்தல்.]

மானேயென்கண்ணேமயிலேகுயிலேசெந் - - *
தேனேமதனுபிஷேகமே - மீனின்ற - - ௨௱௧.
குன்றுக்குநீச்சங்கொடும்பாம்பின்குட்டிக்கு - - *
நஞ்சுங்கொடுத்தவரார்நங்கையே - செஞ்சிலைக்கைச் ௨௱௨.
சேவகனுக்கன்றொருபெண்சிங்கமொருகன்றீனும் - *
பாவனைபோலேயெழுதிப்பக்கத்தில் - ஓவியமாக் - ௨௱௩.
காரணையொன்றெழுதிக்காட்டவரிக்கன்றுதுள்ளிப் - *
போராடிப்பாய்ந்தகதைபொய்யலவே - யாருக்கும் - ௨௱௪.
சாதித்தொழில்தனக்குத்தானேவருமொருவர் - - *
போதிக்கவேண்டுமோபொற்கொடியே - மாதர்க்குள் ௨௱௫.
உன்புத்திபென்புத்திக்கோவிரட்டியாகிலுமென் - *
றன்புத்தியுமக்கேளசற்றேகேள் - ஒன்பதூர்க் - ௨௱௬
கொஞ்சுபரிநகுலன்கூளேந்திரன்பன்றிமலை - - *
மஞ்சட்குளியைமறவாதே - மஞ்சண் - - ௨௱௭.
மணங்காட்டியாட்பிடிக்கும்வாடைப்பொடியின் - *
குணங்காட்டிக்கண்காட்டிக்கோலம் - இணங்கியபொன் ௨௱௮.
னுத்தரியஞ்சற்றேயொருபாற்றெரியவிட்டுக் - *
குத்துமுலைச்செம்பொற்குடங்காட்டி - முத்துநகை ௨௱௯.
காட்டிவளைகாட்டிநடைகாட்டியிடைகாட்டிநயம் - *
காட்டியிளையோர்க்காசைகாட்டிவாய் - கோட்டுமுலை ௨௱௰.

ஓய்ந்தானின் முகந்திரைந்தாற் சல்லிக்காசொன்றுமுனக் *
கீந்தாதரிப்பவராரோ திழையே - ஆட்டீந்த பஞ்சுப் ௨௱௰௧

பெட்டிபோலேநரைத்த பெண்கள் கையிலெல்லாவருந்தீ *
சட்டிசுறண்டவருந்தையலே - கட்டழகின் - ௨௱௰௨

வாலிபத்தே தேட்டின் மனம் வைத்தாற் பொற்றகட்டால் *
வேலையிடுக்கட்டலாம் வீடெல்லாம் - காலைப் - ௨௱௰௩

பிடிப்பார் முழுப்பிரட்டுப் பேசியிலைகீறி - - *
மடிப்பார் தருவார் வருவார் - படுக்கைவிதங் - ௨௱௰௪

காட்டுவேனென்பாரக்கள்ளவண்டர் தங்களையும் - *
வீட்டிலழையாதே மெல்லியலே - வீட்டில்வந்து - ௨௱௰௫

பாயப்பகட்டுவிதப்பண்ணுவார்க்குப்புழுதி - *
வாயிற்புகட்டுமயல்பூட்டு - நீயொருத்தர்க் - ௨௱௰௬

காசைவைத்தாற்பின்னொருத்தரண்டாருடனொத்த - *
வேசையர்க்கெல்லா நகைப்பாமெல்லியலே - காசுபணம்.

குப்பல்குப்பலாகக்குவித்தாலும் வாலிபத்தில் - - *
வைப்பிருக்கசற்றுமனம் வையாதே - செப்பு - ௨௱௰௮

மூலையைக்கசக்கிவிட்டு முட்டாள்சரசத் - - *
தலையவிழ்ம்பேரையழையாதே - சிலைநுதலாய் - ௨௱௰௯

முன்பின்னறிபார் முடிப்பாகப் பொன்னெழுதூற் - *
றென்பதுதந்தாலுமனமொவ்வாதே - இன்பமுடன் ௨௨௰

கூடுவார் நித்திரை நீகொள்வதுபார்த்துப் பொடியைப் *
போடுவார் சேலைவர்க்கம் பொன்னுடைமை - சோடிணையாச.

சேரச்சுருட்டியப்பாற் செல்வார் விடிந்ததற்பின் - *
யாரைப்போய்க்கேட்பது நாமாரணங்கே - ஊரிலே ௨௨௨

தந்தைகீழ்ப்பிள்ளையுண்டு தாய்கீழ்ச்சிறுவருண்டு - *
வந்தால்மறையவரச்சொல்லித் - தந்தமதின் ௨௨௩

வாயில்வடுச்செய்யாமல் மார்பினகம் வையாமல் - *
தோயுமிதங்காட்டிச்சுகங்காட்டு சேயிழையே - ௨௨௪

அந்திபடப்பணயமஸ்தரொக்கமாகவந்தால் - - *
சொந்தமுள்ளபேர் தமக்குச்சொல்லியே - முந்திவந்து ௨௨௫

சாரமுண்பாய் நீயவன்பின் சக்கையைத்தின்பானெனமுன் *
னேரமழைத்தனுப்புநேசமாய்த் - தூரத் - ௨௨௬

திருந்துவந்துகூடிவிடிந்தேகுவார்தம்மேல் - *
பரிந்தாசைபோற்பிறகேபற்றிப் - பிரிந்திருக்க - உஉஎ.
மாட்டேனேயுன்னாலேமாப்பிளைமாராசையெல்லாம் - *
போட்டேனேயென்னபொடிபோட்டாய்நீ - வீட்டில் உஉஅ.
தனித்திருக்கப்போமோடாசாமீயுன்றம்பல் - *
இனித்திருக்குந்தாடாவிருடா - சனிக்கிழமைக் - உஉகூ.
கப்பாலேநீவருவாயாணையிடுமுக்காலும் - - *
தப்பாதேயென்றனுப்புதார்குழலை - மைப்பொருங்கண் உஙய
மாதுநல்லாட்வேறுமருந்தேன்வர்திரும்பும் - *
போதுவருமேபுலதையெல்லாம் - காதல்கொண்ட் உஙக.
மன்னவரைத்தாங்குச்சரமஞ்சத்திலேயிருத்திப் - *
பொன்னவரைக்கேளாமற்புலவிலுல் - மின்னரசே - உஙஉ.
ஊர்க்குஞ்சலிகைநம்மோடொத்தவர்க்குமெண்ணிக்கை *
யார்க்குங்கனத்தகுடியாகலாய் - பார்களுள்ளே உஙங.
புல்லுவிற்றுங்கிளைவிற்றும்பொன்கொடுப்பார்காணமக்குக் *
கொல்லிமலைப்பாவாய்குலதெய்வம் - பல்விழுந்த உஙச.
கூனற்கிழவன்கொடுக்கும்பணம்மதில் - - *
நானக்குழலைநனையுண்டோ - மானமின்றி - உஙரு.
அப்பன்வருவான்தம்பிமகன்வருவான் - - *
தப்புமுலைறமென்றுநீதள்ளாதே - இப்புவியில் - உஙசு.
மாலைக்குளியர்வெகுமாமாயக்கள்ளர்தங்கள் - - *
சோலிக்குப்போகாதேதோகையே - வேலையின்றித் உஙஎ
தத்தையனையாளைத்தழுவிப்பணம்பறிக்கும் - - *
எத்தனைநாமெத்துவதுமெத்துகாண் - சித்ர - உஙஅ.
கதையைக்கேளென்பருவக்காலத்திலிந்தப் - - *
பதியிலொருகுச்சிலியப்பையல் - மதுரை - - உஙகூ.
மழுங்கணியென்னும்பேராள்மார்தர்தன்த்தைத் - - *
தழுவிப்பறிப்பான்தனத்தை - முழுதும் - - உசய.
கிழக்குத்தெருவினெட்டைக்கிழிஞ்ஜில்வீட்டைக் - - *
குளப்பறியாகப்பறித்தான்கூடி - முளைத்தெழுந்த - உசக.
செட்புமுலைமாதேசிவிலிபுத்தூர்தாசிக் - [று, உசஉ.
குப்பியுடைமையெல்லாங்கொள்ளைகொண்டான் - லைவட்பென்

தந்திரமாகப்பசப்பித்தஞ்சாவூர்ச்செல்லிதனைக் - *
கந்தைபொருத்தவிட்டான்கைம்மருந்தால்-இந்தவகை ௨௪௩.
ஆங்கவனுக்கேகொடுத்தாரல்லாதவன்பொருளை - *
வாங்கினபேரில்லையென்மேல்மாலாகி-ஈங்குவந்தான் ௨௪௪.
குன்றுமுலையாய்கொழுத்தகுட்டியகப்பட்ட - *
தென்றுபூரித்தேனிருந்தாளும்-அன்றுமுதல் - ௨௪௫.
மாட்டுப்பரங்கிக்காய்மாதேதினங்கறியாக் - - *
கூட்டிக்கொண்டாங்கவனைக்கூடியே-வீட்டில்வந்த ௨௪௬.
நாலாநாளல்விண்டுச்சாமஞ்சொதித்துக் - - *
காலிற்றொடுசெருப்புக்கட்டியே-மேலெல்லாம் - ௨௪௭.
வெண்ணீறுபூசியைந்துவீரசடைபின்னிவிட்டுப் - *
பெண்ணீலியென்றுகண்டோர்பின்வாங்க-எண்ணமின்றிச்
சுள்ளுஞ்சோறுங்கைச்சுரிகையுமாய்ப்போய்க்கழுவிற் *
கள்ளன்வலதுகுதிக்காணரம்பில்-மெள்ள - ௨௪௯.
விளக்கெரித்துநெய்வடித்துவீட்டில்வந்துநன்றாய் - *
உழக்கரிசிபெய்தூறவைத்துப்-புளிப்பில்லாச் - ௨௫௰.
சாற்றிவிட்டும்பாற்குழம்பிற்சர்க்கரையிற்கூட்டியிட்டுஞ் *
சோற்றிவிட்டுநெஞ்சைச்சுழலவிட்டு-வேற்றவனு ௨௫௧.
பாயத்தாற்றேடும்பணம்புற்றிலேகரடி - - *
வாயைவைத்தாற்போலுறுஞ்சிவாங்கிவிட்டேன்,பேய்போலக்.
கையிலுள்ளதெல்லாம்போய்க்கப்பரையொன்றேந்தியதோ *
தெய்வமேயென்றுதிரிகிறான்-நெய்யரிசி - - ௨௫௩.
நாளுக்குநாள்செலவாய்நங்காயுனக்குவரும் - - *
ஆளுக்கிருக்குதின்னமாழாக்கு-வாள்விழியாய் - ௨௫௪
வேடிக்கையாய்மாசிவீதியிலேநாமுலவ - - *
ஆடிக்குமுன்னேயென்னாசையெனத்-தேடுநிறி - ௨௫௫.
யுள்ளவனைமெள்ளவுபாயமாய்க்கூட்டிப்போய்க் - *
கொள்ளும்பவளமுத்துக்கோவைவடம்-உள்ள - ௨௫௬.
உடையுஞ்சவளிக்கடையும்பார்த்தையா - - *
கிடையாச்சரக்குக்கிடைத்த-தடைவாயென் - ௨௫௭.
றுத்தண்டமாலையைக்காதோலையைப்பொன்மோதிரத்தை *
வைத்தென்றுளுங்கடவாங்கித்தா-பத்தஞ்சு - ௨௫௮.

வட்டிசுமந்தானுமப்பால்வாங்கலாமென்பாயச் - *
சொட்டனுக்குநெஞ்சுசுருக்கென்னும்-பொட்டெனத்தன்
கைத்தனத்தையீவான்கடையிலேயுள்ளசரக் - *
கைத்தனையும்வாங்கியறையிலிடு-வைத்து - - உ௬௰.
மருந்திடுப்பிற்கட்டிவருவார்சிலர்மேல் - *
இருந்துடம்பைவாட்டியெடுப்பார்-பரிந்தணைந்து உ௬௧.
கைச்சரசம்போற்றடவிக்கண்டுபிடித்துடனே - - *
பிச்சுப்பிடுங்கியெறிபெண்ணணங்கே-லச்சையற உ௬உ.
மன்மதநூலேப்படித்தவம்பனையென்னுணையுன்றன் - *
சென்மசென்மமுள்ளமட்டுஞ்சேராதே-சன்யாச - உ௬௩.
ருத்திராக்ஷப்பூணருபர்சிலருண்டுவந்தால் - - *
மெத்தையிலேவைத்துவிளக்கணைத்துச்-சத்தமின்றிக் உ௬௪.
கூடையிலேயாள்வந்துகூப்பிட்டாலேயர்தமைக் - - *
கூடையிலேமூடிவைத்துக்கூப்பிடுநீ-பாடிக் - உ௬௫.
கடுக்கனலேக்குங்கவிப்புலவர்வந்தால் - - - *
துடுக்காயொருவார்த்தைசொல்வார்-கொடுக்கவென்றால்.
ஐந்துபொன்னும்வாங்காரரைப்பணமேபோதுமென்பார் *
சிந்தையவர்மகிழச்செய்திட்டால்-நந்தம் - - உ௬எ.
இசைபாடுவார்கூடாதென்றுற்கொடிய - - *
வசைபாடுவார்கெடுமேவாழ்வு-அசையவுளம் - - உ௬அ.
அஞ்சுகின்றகச்சேரியாட்சேவகர்வந்தால் - - *
வஞ்சியவரீந்ததைநீவாங்கிக்கொள்-கொஞ்சமெண உ௬௯.
எண்ணுதேகைமுதல்மற்றென்னபோமோர்செம்பு [ங்கே.
தண்ணீர்போம்நாழிடும்பொய்ச்சத்தியம்போம்-பெண்ணண
வாவென்றழைப்பார்மணியப்பிளுக்கர்சும்மா - *
போவென்றுசொன்னலும்பொல்லாப்பு-பாவையயே உஎ௧.
சாதனையாச்சேலையிலேதம்பலத்தின்சாறுமிழ்ந்து - *
சூதகமானேனென்றுதூரவிரு-மாதவிடா - - உஎஉ.
யானநாளிற்பணயமஸ்தமொக்கங்காணிலொரு - - *
பானைவெந்நீர்க்காகவெண்ணிப்பாராதே-நானுன்மேல் உஎ௩.
மோகமுற்றேனீயென்மேல்மோகமில்லையென்றுசிலர் *
தோகைநல்லாயுன்கருத்தைச்சோதிப்பார்-ஓகோநீர் உஎ௪.

ஊன்னமாச்சொல்லவந்தீரென்றுசையும்மேலென் - - *
றன்னமேயென்றலைதொட்டாணையிடு - சொன்னவந்தப் உ௭௫.
பொய்யாணையார்சீவன்போகுதோபாரெனக்குத் - *
தையாலவ்வாணைதயிர்ச்சாதம் - கையில் - - உ௭௬.
இருட்டினிற்செல்லாப்பணத்தையீந்துபடுத்துக் - *
கருக்கலிலேபோவாரைக்காட்டித் - தரச்சொல்லு உ௭௭.
வாயமட்டாப்பேசினுல்மானேமுசலின்மேல் - *
நாயைவிட்டாற்போலெழுப்பிநம்மைவிடு - கோயிலுக்குள்.
நம்பியாரையருட்ணுண்டுநம்பியார் - - *
தம்பியாரைக்கூடிச்சஞ்சரிநீ - அம்பெனுங்கண் - உ௭௯
மைவிஸ்தாரக்குயிலேவாய்விஸ்தாரக்காரன் - *
கைவிஸ்தாரக்காரன்கையைவிடு - செய்யுமறைக் - உ௮௰
கட்டளையார்வந்தாலுன்கைம்மருந்தாலேயறிவைத் - *
தட்டழியப்பண்ணித்தனம்பறிநீ - அட்டிலிலே - உ௮௧
சோறுசமைக்குஞ்சுயம்பாகிவந்தக்கால் - - *
வேறுமொருவேளாண்மைவேண்டுமோ - சாறும் - உ௮௨.
பரும்படியுஞ்சம்பாவும்பாற்குழம்புநெய்யும் - *
வரும்படிந்தகட்டளையாய்மானே - தரும்பொருளை - உ௮௩
வெம்பளிக்கைபண்ணுதேவெஞ்சினப்பண்டாரிவந்தா - *
லும்பளிக்கையூர்வரத்தையொக்குமே - சம்பளத்தைக் உ௮௪.
கூட்டிச்சுமத்திவைப்பான்கோயிற்கணக்கனொரு - *
வேட்டுப்போட்டுப்போகவீட்டிலழை - ஆட்டுவிக்கக் உ௮௫
கால்பிடித்தநட்டுவனார்கையைப்பிடித்தழைத்தால் - *
வேல்படைத்தகண்மயிலேமேவிவிடு - சாலநெடு - உ௮௬,
நேரஞ்செல்லாமனெடுங்குடைக்காரனைமுன் - *
னேரமழைத்தனுப்புநேசமாய்ச் - சாரமுள்ள - உ௮௭,
நாடகத்துப்பாங்குநமக்குநடத்துவிக்கும் - - *
பாடகனையுந்தனதுபண்ணிக்கொள் - கூடுதித்திக் - உ௮௮.
காரனையுங்கைத்தாளக்காரனையுமெக்காளக் - - *
காரனையுங்கூடியிதங்காட்டாதே - தூறு - - உ௮௯
தலையராய்க்கைத்தாளழைத்தம்பியராய்ப்பிறற் - - *
கலையராயுன்னழகைக்கண்டு - விலைகொடுத்தால் - உ௯௰,

வாங்குவாய்சற்றேமருவுவான்பேய்ப்படுவான் - - *
தூங்குவான்போவான்சுகமறியான் - பூங்குயிலே - ௨௧௧.

மஞ்சத்தினியுமொருமாப்பிள்ளையுமாயிருந்து - - *
மிஞ்சுசரசத்திலொருவேற்றாள்வந் - தஞ்சாறு - ௨௧௨

தந்தாலவனைச்சமையல்வீட்டிற்பதுக்கிச் - - *
செந்தேனைமெல்லச்செறுமுவேன் - வந்தணைந்து ௨௧௩.

கொல்லைக்குப்போனகுணம்போற்கைகாலலம்பி - *
மெல்லப்போநம்மையெவர்வெல்லுவார் - நல்ல - ௨௧௪.

உடந்தையாகத்திரிந்தவுத்தியோகஸ்தர்க் - - *
கிடைஞ்சல்வந்தாலுன்னையும்வந்தேய்ப்பார் - மடந்தையே

காணிக்கையானேனுன்கண்டியைத்தாதண்டையைத்தா *
மாணிக்கமாலையைத்தாவைத்துநான் - காணிக்கை - ௨௧௬.

தீர்ந்தமறுமாதந்திருப்பித்தருவனென்பார் - - *
எந்திழையேநீசற்றிணங்காதே - காந்தாரி - - ௨௧௭.

தாய்க்கிழவிசம்மதித்தாற்சம்மதமென்பாரென்று - *
வாய்க்குப்பயந்தவர்பின்வாய்பேசார் - நோக்கமாய் ௨௧௮.

என்னைக்கலந்தவர்களென்றாலுங்கைநிறையப் - - *
பொன்னைக்கொடுத்தாற்புணர்ந்துவிடு - மின்னே - ௨௧௯.

பறவைமிருகங்கண்முறைபார்க்குதோவேசி - *
முறைபார்க்கவேபிழைப்புமோசம் - சிறுபோதே - ௨௨௰.
தேடியல்லோவன்பிற்சிலம்பியென்றுமன்னவனாக் - *
கூடுதிருவாரூர்க்கொண்டியென்றும் - ஆடவரைத் - ௨௨௰௧.
தெட்டும்பெருங்குன்னைத்திம்மியென்றுங்கொண்டையிற் பூ
மட்டுண்டவொற்றியூர்வல்லியென்றும் - சிட்டர்தொழும். ௨௨௰௨
பூவணமாம்பொன்னகரிப்பொன்னனையாளென்றுமுடற் *
பூவணமாந்தென்னுறையூர்ப்பொன்னியென்றும் - தேவர்தொ
[ழும் ௨௨௰௩.
சொக்கேசர்கோயிற்றுணைக்கொடியென்றும்புவிக்குள் - *
மிக்கானபேர்படைத்தார்மெல்லியலே - அக்காலம் ௨௨௰௪.

வண்ணமாற்றுப்பசும்பொன்வாங்கவொருத்திசெய்த - *
இன்னமாற்றுக்கதையைக்கேட்டிலையோ - பெண்ணணங்கே.

என்றிப்படித்தாயியம்பினுள்புத்தியதை - - *
யன்றிப்படித்தாளனேகபுத்தி-அன்றுமுதல் - ௩௱௬

✓ [மதனுபிஷேகத்தின்செய்திகூறல்.]

காதன்மதமீறிவருங்காமுகராம்யானைகளைக் - - *
கோதுமுகிரங்குசத்தாற்குத்தியிதம்-ஓதியந்த - ௩௱௭

மாரனரமனைக்குள்வைத்தண்ணத்துச்சேர்ந்துரச - - *
சாரக்கரும்புதனையூட்டி-பூரலவாய்த் - - ௩௱௮

தம்பற்கவளந்தனைக்கொடுத்துக்கும்பமுலைக் - - *
கம்பத்துடன்பிடித்துக்கட்டினுள்-அம்பரத்தீ - ௩௱௯

மூட்டுவிக்கும்யோகமுனிவோரையும்பொம்மல் - *
ஆட்டுவிக்குந்தோலுருப்போலாக்கினுள் தீட்டியவேல் ௩௱௰

வண்ணக்குடையரசர்மாநிதியாமுந்நீரை - - *
உண்ணக்குறுமுனியையொப்பானுள்-பெண்ணுக்குத் ௩௱௰௧

[அவ்வளதுதோழிகளைக்கூறல்.]

தோழிமார்கைமருந்துச்சொக்கியென்றுஞ்சாராயத் - *
தாழியென்றந்தூதுசவுந்திரியென்றும்-எழுமதி - ௩௱௰௨

லேறியென்றுந்தஞ்சாவூரொத்தியென்றுமாமாயக் - *
காறியென்றுங்குண்டுணிவாய்க்கள்ளியென்றும்-மாருட்டக்

குள்ளியென்றுமாயக்குருவியென்றுமாரீசக் - - *
கள்ளியென்றும்பத்துப்பேர்காமுகரை-மெள்ளப் ௩௱௰௪

பொருத்துவாருடலாய்ப்போவாரைமோடி - - *
திருத்துவார்தாரரைச்சிப்பித்-துரத்துவார் - ௩௱௰௫

கல்லிலேநாருரித்துக்காண்பார்நனைந்தவிடங் - - *
கல்லுவார்தாமுமொருகைபார்ப்பார்-மெல்லிநல்லார் ௩௱௰௬

[அவளைவிரும்பியஆடவர்செய்திகூறல்.]

இவ்வாறுசெய்யவிருநிதியந்தேடுமெந்த - - - *
மைவ்வார்விழியாண்மதிநுதற்கும்-செவ்விக் - ௩௱௰௭

கொடியிடைக்குநிலவெறித்தகுறுநகைக்குமொயில்விளைத்த *
பிடிநடைக்கும்வயிரமிட்டப்ரபைமிகுத்த-தொடிகளுக்கும்.

அலையுதித்தவமுதெனச்சொலருமொழிக்குமிருவிழிக்கும் *
மலைகளொக்குமுலைகளுக்குமனதுவைத்து-வலையினுக்குள்.

மான்சிக்கினாற்போல்மருள்வாருந் தூண்டிலிலே - *
மீன்சிக்கினாற்போல்மெலிவாரும்-ஏன்சிக்கிக் - ௫௱௨௰.

கொண்டோமென்றுள்ளங்கொதிப்பாருங்கூடியின்பம் - *
கண்டோமென்றுள்ளங்களிப்பாரும்-கண்டனைய ௫௱௨௧.

பேச்சுமடந்தைக்குப்பிடிக்குமனதாசையென்று - *
பூச்சுமருந்திட்டணையப்போவாரும்-வாய்ச்சுதென்றே ௫௨௨.

யார்க்கும்பொடிபோடுமாயிழைமுன்வாடைமணம் - *
சேர்க்கும்பொடிபூசிச்செல்வாரும்-ஊர்க்கிணங்கத் ௫௨௩.

சந்தனத்தையீந்துசரிந்ததனக்காரிபண்ணுந் - - *
தந்தனத்துக்குள்ளாய்த்தளர்வாரும்-தந்திரமாய் ௫௨௪.

மாதைப்பசப்பவென்றுவாசல்மட்டும்வந்துநரைப் - *
பூதத்தைக்கண்டகலப்போவாரும்-கோதாயுன் - ௫௨௫

கால்பிடிக்கவோவடைப்பைகட்டவோசண்பகப்பூ - *
மேல்பிடிக்கவோவிசிறிவீசவோ-கோலமலர் - ௫௨௬.

கட்டவோகட்டழகிகண்ணுறங்கப்பொற்குறங்கு - *
தட்டவோவென்றருகிற்சார்வாரும்-வெட்டிவேர் ௫௨௭.

மண்டுகுழலாள்குளித்தவாடைமஞ்சணீரையள்ளிக் - *
கொண்டுதலைமேற்றெளித்துக்கொள்வாரும் - அண்டர்பிரான்

சந்நிதியிற்சந்தடியிற்றள்ளுண்டுவீழ்வார்போற் - *
பின்னுகுழலாளைப்பிடிப்பாரும்-பின்னொருத்தன் - ௫௨௯.

வீட்டிலிருக்கவெளியிலேநின்றுசன்னை - - - *
காட்டித்திரிந்துகளைவாரும் வீட்டிறப்பை - ௫௩௰.

அண்டிக்கலவிசெய்யுமாரம்பங்கேட்டுவெட்டித் - *
துண்டித்தாற்போலத்துடிப்பாரும்-கண்டனையாள் ௫௩௧.

சோதிமுகமஞ்சள்துவண்டதுகிற்போர்வையுடன் - *
வீதிதொறும்போய்ப்பிலுக்கிமீள்வாரும்-காதளவு ௫௩௨.

மைப்பட்டகண்ணிசப்ரமஞ்சத்தின்மேற்காலத் - *
துப்பட்டிகொண்டுதுடைப்பாரும்-செப்பமுள்ள ௫௩௩.

தெப்பத்திருநாளிற்றெப்பக்குளத்துமங்கை - - *
தெப்பத்தேயேறிவருஞ்சீராட்டில்-அப்பம் - ௫௩௪.

வடைசுகியன்றோசைவகைகள்பணியாரம் - - *
கடையிலேகொண்டுமடிகட்டிச்-சடுதியிற்போய் ௫௩௫.

நாரிகையிலேகொடுக்கநாடிவடமோடுமாழ் *
வாரியிலேயோடிவருவாரும்-பேராம் ௩௩௬
வசந்தன்றிருநாளின்மண்டபத்தின்மங்கை *
இசைந்துநடப்புரியுமெல்லை-கசங்காமல் ௩௩௭.
மல்லிகைப்பூச்செண்டுமருக்கொண்டுசந்தடியை *
மெல்லவிலக்கிவரும்வேளையிலே-நல்லபட்டைக் ௩௩௮.
கம்பாலடிபட்டகஸ்தியினுளைந்துடம்பு *
செம்பாலொழுகத்திரிவாரும்-தம்பிரான் ௩௩௯.
பல்லக்குக்கூடிப்பதினாறுநாழிகைமேல் *
வல்லொக்குங்கொங்கைவளவுக்குச்-செல்லுகையிற் ௩௪௰
குக்கல்வாய்காட்டிக்கொடுக்கத்தலையாரி *
கைக்குளகப்பட்டுக்கட்டுண்டு-கக்குரத்தம் ௩௪௧
மூக்கிட்டொழுகமுழங்கையிடிபட்டுநெஞ்சிற் *
சீக்கட்டிக்கொண்டுதிரிவாரும்-தூக்குமஞ்சத் ௩௪௨.
தேயொருவன்வீட்டிலிருக்கவதுகாணாமற் *
போயொருவன்வீட்டிற்புகுதவே-ந்யாயமற்ற ௩௪௩.
பூசல்விளைத்துப்பொருமையினாலேவாது *
பேசிவெளியிற்புறப்பட்டு-ரோசமுடன் ௩௪௪.
மாதொருத்திக்காப்பொருதவாலியுஞ்சுக்ரீவனும்போல் *
வீதியிலேமற்கட்டிவீழ்வாரும்-சாதிரைத்தீ ௩௪௫.
வட்டிவெளிச்சமினுமினெனவத்தியர்முன் *
கட்டியங்கள்கூறக்கடுநடையாய்த்-தொட்டுவரும் ௩௪௬.
பாதக்குறட்டிற்பவளக்குமிழிலங்க *
மாதுமணவறைக்குள்மன்னர்வரும்-போதிலந்த ௩௪௭.
வீட்டிற்பரணேறிமேவுந்தொழிலமளி *
கேட்டுப்பதுங்கிக்கிடப்பாரும்-பாட்டிளஞ்சொன் ௩௪௮.
மாங்குயிலைப்போலமருவக்கனவுகண்டு *
தூங்கையிலேயிந்திரியஞ்சோர்வாரும்-எங்கிவளுக் ௩௪௯
கீடுவகைகாணுமிரதம்பொன்னுக்குவது *
பாயமென்றுமித்ரம்பலகூட்டித்-தீயிற் ௩௫௰.
குகையிலேவைத்துக்குனிந்தூதிவாதப் *
புகையிலடிபட்டுப்புகைந்து-திகைதெரியா ௩௫௧.

மாலைக்கண்ணாகிமதிமயங்கித்தங்கள் தங்கள் - - *
காலைக்கண்ணாக்கிவழிகாண்பாரும்-வாலிபத்தில் - ௫௫௨.
பூணார்முலையாட்காப்பொன்திருடிக்கையிரண்டும் - *
சாணாகக்கண்டுதளர்வாரும்-வாணுதற்காத் - ௫௫௩.
தாங்கன்னமிட்டுத்தலையைக்கடைக்காசு - - *
வாங்கென்னவிட்டுடலைமாய்ப்பாரும்-தூங்கிவிழும் ௫௫௪
வண்ணானைமயிரும்மாதவிடாய்த்தம்பலமும் - *
பெண்ணாய்த்தலையோடும்பின்னையொன்றும்-சுண்ணாம்புப்
பானைபோலேநன்னாத்தப்பாவிபடுக்கைத்தலத்திற் - *
பூனைபோற்றேண்டிப்புதைப்பாரும்-மானனையாள் ௫௫௬.
இட்டமருந்தாலிருமல்பிடித்தோயாமற் - - *
குட்டியிட்டநாய்போற்குரைப்பாரும்-ஒட்டியபுண் ௫௫௭.
என்பவர்க்குநாணியிரசந்தின்றின்கரும்பு - - *
தின்பவர்க்குநாணித்திரிவாரும்-பொன்சரிகைச் - ௫௫௮.
சேலைகொடுத்ததற்குச்சீமாட்டியென்கொடுத்தாள் - *
சூலைகொடுத்தாளென்றுசொல்வாரும்-மூலவரா - ௫௫௯.
யாப்புக்குச்சத்திரமிட்டாவிக்காக்கக்காக்காய்த் - *
தோப்பிற்கிடந்துதுடிப்பாரும்-மாப்பிளைமார் - ௫௬௰.
வைத்தநகக்குறியைமங்கையிருகொங்கையிற்கண் - *
டெய்த்துநெடுமூச்செறிவாரும்-முத்துமுத்தாய்ப் ௫௬௧.
பேசினாலும்போதும்பேதைநமைத்தாஷணமா - *
ஏசினாலும்போதுமென்பாரும்-பாசிழையாள் - ௫௬௨.
கொந்தலரும்பூவணைமேற்கும்பகர்ணலீலைசெய - *
இந்திரன்போற்பக்கத்திருப்பாரும்-ஐந்துபத்து - ௫௬௩.
மாடுவிற்றேநூறுமறிவிற்றேமேழுமந்தை - - *
ஆடுவிற்றேம்வீட்டிலடிமைவிற்றேம்-தேடரிய - ௫௬௪.
வெண்கலத்தாற்குத்துவிளக்குவிற்றேங்காணிவிற்றேம் - *
உண்கலத்தைவிற்றேமுடைமைவிற்றேம்-பெண்செலவுக்
கென்னத்தைகேட்கவந்தாலென்னத்தைநாங்கொடுப்போம் *
என்னத்தைச்சொல்லுவோமென்பாரும்-முன்னமிந்த ௫௬௫.
மின்னாசைகொள்ளாமல்வீணுக்குக்கொண்டோமிச் - *
சன்னாசமென்றுதளர்வாரும்-என்னசெய்வோம் - ௫௬௭.

பங்கைவிற்றுமீத்தோம்பணமினுந்தாபோவென்றாள் *
எங்கேசுமையெடுப்போமென்பாரும் - ரங்குனுக்கு ௱௬௮

தித்திலோனுகாசுசெல்லோனும்போங்குனுநாம் *
இத்தனையுந்தோற்றிழந்தோமென்பாரும் - அத்தையார் ௱௬௯

குளமகளுநன்னுசொர்ணவெல்லாதக்கொண்டு *
நாளையென்றுளென்றுமன்னைநவாரும் - நாளிலே ௱௭௰

பாண்டிநாட்டிச்சிபணமுறுஞ்சினுள் நாங்கள் *
ஆண்டியானோமென்றலைவாரும் - ஆண்டியர்தம் ௱௭௧

தொண்டுவோய்வேடம்போய்த்தோகைக்குடையவரைக் *
கொண்டுபோய்க்கையிற்கொடுப்பாரும் - கண்டசெட்டு ௱௭௨

மோசமாச்சுக்காண்முதலுக்குப்புல்வாண்டைக் *
காசுமில்லையென்றுக்காவாரும் - வேசியிவட் ௱௭௩

கேந்தபொருளைவட்டிக்கீந்தோமோநாமிருக்க *
வாய்ந்தமச்சுவீடுகட்டிவைத்தோமோ - கூந்தலிளம் ௱௭௪

பேடைமயில்போல்வீட்டுப்பெண்டாட்டிக்கேயுடைமை *
சோடிணையாப்பூட்டிச்சுகித்தோமோ - ஆடுகொண்டு ௱௭௫

விட்டோமோமாடுகொண்டுவிட்டோமோதெய்வத்துக் *
கிட்டோமோதேகியென்பார்க்கீந்தோமோ - அஷ்டதிக்கும்.

நாடிப்புகழ்பெரியநாகமன்போற்பாமாலை *
சூடித்தியாகஞ்சொரிந்தோமோ - தேடுநிதி ௱௭௭

தன்னைக்கொடுத்துத்தரித்திரத்தைவாங்கினோம் *
என்னவியாபாரமென்பாரும் - இன்னவகை ௱௭௮

காமுகரெல்லாமயங்கக்காளத்தியையன்மகன் *
ஆமொருவனிவ்வூரானுதியையன் - சேம ௱௭௯

மதுரைக்கொருநாள்போய்மாசித்தெருவில் *
விதிவசத்தாற்கண்டானம்மின்னை - மதிநுதலாள் ௱௮௰

மையலுக்குள்வீழ்ந்தான்வடுச்செய்தமாமரத்தில் *
மெய்யுரிஞ்சப்போய்க்கவரிவீழ்ந்தாற்போற் - கையில் ௱௮௧

இருந்ததெல்லாம்வீட்டிலிருந்ததெல்லாமாஸ்தி *
இருந்ததெல்லாந்தோற்றுனிரந்தான் - மருந்தினாற் ௱௮௨

கள்ளுண்டார்போலக்கலங்கினான்வாசலிலே *
தள்ளுண்டான்தன்னெழுக்கந்தப்பினான் - விள்ளுவதென் ௱௮௩

ஆதியையனென்னுப்பேரன்றேபோயிப்பால்வி
யாதியையனென்னும்பேராயினன்-யாதி ௫௮௪
யுடலாகியொட்டியபுண்ணுள்ளுருக்கயார்க்கும்
தொடலாகாச்சீச்சிரங்குட்டலை-கொடிய ௫௮௫
அணையாப்புமேகவெட்டையண்டத்துவாதம்
புரைவாய்ப்பவுத்ரம்புகைச்சல்-இருமல் ௫௮௬
இளைப்புப்பொருசுமருந்திட்டநோய்பித்தம்
களைப்பமாய்ப்பூணைபோற்கத்திக்-கிழக்கே ௫௮௭
அடுத்தமனையிலருகுதிண்ணைதன்னிற்
படுத்துக்கிடக்கிறான்பாரும்-படித்தவரே ௫௮௮
இப்படியாத்தேடியுண்ணுமேந்திழையாள்வாழ்மதுரைக்
கெப்படிபோவீர்வருவதெப்படிகாண்-செப்புமவ ௫௮௯
தானியையரோவென்றுதக்கபுத்திபோதிக்க
ஞானியையரைப்பார்த்துநான்விரத்தி-யானேன் ௫௯௰

[அவதானிமதுரைக்கேகினமைகூறல்.]

இருப்பத்தூணிற்கறையானேறுமோபோம்போம்
நெருப்பிற்புழுவிழுமோநீசொன்-கருத்தை ௫௯௧
அறியீரென்றேனல்லதையரோவென்று
பிரியாமல்வந்தாரென்பின்னே-நெறியினிற்போய் ௫௯௨
வையகமேலெய்தியசீர்வைதிகநூன்மெய்யொலிசேர்
மொய்திரைநீர்வையையில்யான்மூழ்கியே-உய்யப் ௫௯௩
படியுமடியவர்கொடியபடிறுசெயுமிடர்முழுதும்
அடருமெழுகடலினிடையாடிக்-கிடையாப் ௫௯௪
பாரத்துக்கேவிருப்புற்றோர்பவத்துக்கோர்நெருப்பொப்பாம்
அருட்பொற்றாமரைக்குட்போயாடி-உருச்செபிக்கும் ௫௯௫
ஐந்தெழுத்தைச்சிந்தைவைத்ததிட்டன்பருக்குச்சஞ்சலத்தைச்
சிந்துசித்திக்குஞ்சரத்தைத்தெண்டனிட்டுக்-கந்தபுஷ்பக ௫௯௬
கற்பகமெனப்பொலிகடப்பநிழலிற்குலவும்
அற்புதகயற்கணுமையைத்தொழுது-சிற்பரத்தின் ௫௯௭
நேசர்மணவாசர்பவநாசர்கயிலாசர்சக
தீசர்மதுரேசரடியான்போற்றி-நேசமுடன் ௫௯௮

துங்கப்ரகாரத்தைச்சுற்றிவடகுடபாற் - - *
சங்கப்புலவர் தமையேத்தி - எங்குமுள்ள - - ௬௩௯
நியமாபாதகமுந்நிரத்தீர்த்தம்பாரி - - *
நாயகர்பொற்கோபுரத்தைநாவிங்கி - ஆயிரக்கால் ௬௪௰

[மதனுபிஷேகத்தைக்கண்டுமருண்டமைகூறல்.]

மண்டபத்திற்கண்டேன்மதனுபிஷேகத்தை - - *
விண்டலத்தைவிட்டுவந்தமேனகையைக் - கொண்டைச் ௬௪௧
சொருக்கழகுமுத்துத்துராயழகுஞ்செவ்வாய் - - *
முருக்கழகுஞ்சேலைமுகப்பிற் - கருக்கழகும் - ௬௪௨
வேலழகுபோன்றவிழியழகுந்தண்டையிட்ட - - *
காலழகும்பொற்கடகக்கையழகும் - ஓலையிட்ட - ௬௪௩
காதழகும்வச்ரமணிக்கச்சிறுக்குமார்பழகும் - - *
சோதிமுகத்தழகுந்துங்கரத்ந - மாதுரதி - ௬௪௪
கட்டழகும்பொட்டழகுங்கச்சைகட்டிவந்தகட்டு - *
மட்டழகுங்கண்டுமயங்கினேன் - கிட்டவந்த - ௬௪௫
நாட்டத்தைக்கண்டுநடந்துசிலைக்காமனும்பூந் - *
தோட்டத்தைக்கொள்ளைகொண்டுதோன்றினன் - வாட்டமதன்
கையம்புபாயவஞ்சிகண்ணம்புபாயநின்று - - *
தொய்யுமான்போலத்துவக்குண்டேன் - தெய்வசுதி ௬௪௭
கானுமிசைராகங்கைத்தாளமத்தளங்கை - - *
வீணைபலகைதித்திவேணுசுரம் - கோணுமற் - ௬௪௮
கூடுஞ்சுருதியுடன்கொம்பனையாள்சங்கீதம் - *
பாடுஞ்சுருதியின்பம்பாலிக்க - ஆடவரை - - ௬௪௯
எய்யுமதவேள்கைக்கிசையுமலரீவாள்போல் - - *
தையலாள்புஷ்பாஞ்சலிசெய்தாள் - செய்துபிள்ளை ௬௫௰,
யார்கவுத்துவங்கொண்டாளாடவிளையநயி - - *
னார்கவுத்துவங்கொண்டுநண்ணினேன் - சேரும் - ௬௫௧
நிலைக்கிடைகொண்டாள்மருட்டுநீலமலர்ச்செங்கண் - *
வலைக்கிடைகொண்டாளென்மனத்தைக் - கலைப்பரத ௬௫௨
முந்தோரொடுப்பெடுத்தாள்மூரிவில்லைப்பூட்டியென்மேல் *
வந்தோரொடுப்பெடுத்தான்மன்மதவேள் - நந்திசொன்ன.

சொற்கட்டிலாரிதொடுத்தாள் முன்னின்றவ்வை - *
மற்கட்டுவாள்போல்மறையநின்றேன் - பொற்கடகக் ௨௱௰௪
கைச்சலாங்கொண்டாள்கனப்பேசலாமிதற்கே - *
மெச்சலாமென்றுரைத்தார்விஞ்சையோர் - மெச்சுந் ௨௱௰௫
தருக்கொண்டாள்மற்றோர்சதிகொண்டாள்கண்டே - *
மருட்கொண்டிருக்கவெனைவைத்தாள் - விரித்தசுருள் ௨௱௰௬
பாதிநடித்தாள்கீதம்பாடிஞள்பூப்போட்டு - - *
வாதினடித்தாருமயங்கிஞர் - சூதுமுலை - ௨௱௰௭
மாதுபிரயந்தம்வகுத்தாளிதற்குரைப்ப - - *
தேதுபிரபந்தமெனவெண்ணினேன் - நாதப் - ௨௱௰௮
பதசாரிசாரிகொள்ளப்பார்வேந்தரீந்தார் - - *
முதுசாளிகைப்பொன்முடிப்பை - எதிராக - ௨௱௰௯
நின்றவினயங்கள்செய்தாள்நிஷ்டூரியென்மனது - *
கன்றவினயங்கள்செய்தாள்கன்றுமேல் - மன்றிலொரு ௨௱௨௰
[ளியிந்தக்
கோப்பெடுத்தாள்வேந்தர்பொன்னைக்கொள்ளைகொள்ளக்கள்
கோப்பெடுத்தாளென்றொன்கூடவந்தோர் - காப்பான ௨௱௨௰௧
தாரணிகொண்டாள்வோர்தடமகுடங்கம்பிக்கப் - *
பேரணிகொண்டாளாசைப்பேய்கொண்டேன் - ஆரணங்கு.
சக்கணிநின்றாடச்சபையிலேயோடியந்த - - *
மைக்கணியைமுத்தாடவாஞ்சித்தேன் - இக்கனியாள் ௨௱௨௰௩
செயிலாகுவித்தையினூற்செம்பொனுட்டேனெனவென் *
கைலாகினேந்தக்கருத்தானேன் - மைவாளும் - ௨௱௨௰௪
கையாளுமென்னைவெட்டக்கள்ளியொருகூத்துவிதம் - *
செய்தாளம்மான்மான்வலையிற்சிக்கேனேன் - தொய்யாமல்
நேசிகத்திலோர்நடனஞ்செய்தாள்கடையிலுள்ள - *
கோசிகப்பொன்னுடையெல்லாங்கொள்ளைகொண்டாள் - பேசு
[ம் ௨௱௨௰௫
நயமங்களப்பெண்ணடம்பலசெய்தாள் - - *
செயமங்களம்பாடித்தீர்ந்தாள் - மயல்கொண்ட - ௨௱௨௰௭
பேதையேன்றன்மனதும்பெண்களும்பின்னேன்தொடர *
மாதுமனைக்கேகவழிகொண்டாள் - காதில்வினைசப் - ௨௱௨௰௮

ஐந்தடிபோற்றுள்ளிப்பரதவித்தேன்பாங்கனையச் - *
சந்தடியிற்கையைவிட்டுத்தப்பினேன்-மந்த்ரசெப சஉகூ.
சுற்றமெனுந்தளையுந்தோழனெனும்பாகனையும் - - *
புத்தியெனுமங்குசமும்போக்கியே-மத்தமிஞ்சப் - சநய.
பெண்ணானையைத்தொடரும்பேரானையேபோலப் - *
பண்ணார்மொழியாள்பின்பற்றினேன் - வண்ணமலர்க் சநக.
காலிலிட்டதண்டைகலின்கலினென்றேவமிட - *
மேலிலிட்டபூஷணப்பொன்மின்னெறிப்ப-வாலிபர்கண் சநஉ
டண்ணாந்தகொங்கைக்கறிவைக்கொடுத்திலையிற் - *
சுண்ணாம்பிடாமற்சுருட்டியுண்ணக்-கண்ணிரண்டும் சநந.
மங்கைமேலாகவருவாரும்போவாரும் - - *
தங்களிலேதங்கள்தலைமோத - துங்கமத் - சநச.
அத்தியின்மேற்செல்லுமரசரிவள்கொங்கைகளும் - *
மத்தகமுநோக்கிமதிமருளத் - தத்துபரி - - சநரு.
கான்மீறினாற்போற்கலினநெகிழவிட்டு - - - *
மான்மீறினொதிரோமாறிவிட-வேல்விழியாள் - சநசா.
சந்தனகும்பஸ்தனங்கள்சுமந்திடை - - - *
நைந்தனமென்றுநடுங்கநடந்திவள்-வந்துதன் - சநஎ.
பொன்முகப்புமாளிகையிற்போய்ப்புகுந்தாணின்றேனன் *
முன்முகப்புவாயிலிலோர்மூங்கைபோல்-என்முனொரு சநஅ
செக்குவருவதுபோற்சீமாட்டிக்கைம்மருந்துச் - *
சொக்கியெனும்பாங்கிவந்துதோன்றினாள்-மைக்குழலாள்.

[பாங்கிகள்சந்திசெய்தமைகூறல்]

ஆறொன்றுளுங்களூர்யாதென்றாளேதுங்கள் - - *
பேரொன்றுளண்டியண்டிப்பேசிட்டாள்-காரிகையே சசய.
சீரங்கமெங்கள்பதிசிங்கையனொன்தோப்பனூர் - - *
சாரங்கபாணியையர்தம்பிநான்-நாரணையர் - சசக.
சுப்பையனொன்மாமனூர்சோமாசிபட்டர்பெறும் - *
அப்பயங்கார்தாமெங்களத்தம்பி-செப்புகவி - சசஉ
அஷ்டாவதானியென்பேராயிழையேயென்மனைவி - *
மட்டார்குழலிமனவெறுப்பால்-விட்டேகி - சசந.

நாடிவந்தேனுங்கள்பதிநம்பர்சொக்கலிங்கர்முன்னின் *
றாடிவந்தபெண்ணரசியாரென்றேன் - ஆடவரோ - ௪௪௪
மாணிக்கமாலைபெற்றவச்சிரத்தைக்கும்பகுடக் - - *
காணிக்குவாய்த்தகனதனத்தை - ஆணிமுத்தை - ௪௪௫.
விண்ணிச்சைகொள்ளவந்தமேனகையைப்பெண்ணுக்குப் *
பெண்ணிச்சைகொள்ளவந்தபெண்ணமுதை - எண்ணரிய.
சாஸ்திரவிதகொக்கோகசாரத்தைமேல்விருது - *
பாத்திரசிரோமணியைப்பைங்கிளியை - வாய்த்தமட ௪௪௭.
மானைமரகதத்தைமன்மதகுடோரியைச்செந் - - *
தேனைமதனுபிஷேகத்தை - நானிலத்தோர் - ௪௪௮.
எல்லாமறிந்திருக்கயாமறியோமென்றவிதம் - - *
சொல்லீரென்றாள்மயலைத்தூண்டினாள் - மெல்லிநல்லாய் ௪௪௯
இன்றைக்கெவர்வருவாரோந்திழைக்கென்றேனந்தக் - *
குன்றைப்பொருதமுலைக்கொம்பனையாள் - அன்றதற்குப் ௪௫௰
பட்டணத்துப்பாரபத்யம்பாஸ்கரையனேகோட்டைக் - *
கட்டளையானேபாயக்கட்டுபல - பட்டடையிற் - ௪௫௧.
சோலையப்பப்பிள்ளையோசுற்றுதடைகட்டு - - *
மாலையப்பப்பிள்ளையோவாசல்வழிச் - சாலையஞ்சற் - ௪௫௨.
காரமணியங்கனகசபாபதியோ - - - - *
பாரணிலாயம்மணியம்பங்காரு - சீரணவு ௪௫௩.
ஆனைமணியமாசப்பனோதர்ம - - - - *
தானமணியஞ்சதாசிவனோ - மேன்மைதரும் - - ௪௫௪.
கோயிற்றுறைமணியங்கும்பலிங்கப்பிள்ளையோ - *
ஆயத்துறைமணியமாண்டியோ - ஒய்வறுகா - ௪௫௫.
மோட்டமணியமுருக்கப்பனோகிளைத் - - - *
தோட்டமணியநெட்டைச்சொக்கனோ - மாட்டுவரிக் ௪௫௬
காரனோபாசிவரிக்காரனோபிரங்கிக் - - - *
காரனோபொற்கொடிமேற்காதலொடும் - ஓரிரவில் ௪௫௭.
எத்தனையோபேரிங்கேயெத்தனையோபொன்கொடுவந் - *
தெத்தனையோசொல்வார்களெத்துக்கள் - உத்தமிதான் ௪௫௮
அங்கவரிலேயொருவர்க்கானாலும்வாய்நேராள் - *
இங்கஞ்சிறுதேனாதின்னுமோ - உங்களைப்போல் - ௪௫௯

நற்குணமுள்ளார்தமையேநாடுவாள்வேந்தர்தரும் - *
பொற்குவைக்குமுள்ளம்பொருந்தாள்காண்-சொற்புலமை.

வீறுடையாகியநல்வேதியரோவென்றுசில - - *
கூறியதன்பின்னேயக்கோதையங்கே-தூறுதலைத் - ௪௬௧.

தூதுசவுந்திக்குச்சொன்னாள்பயிலாக - - - *
வாதுக்கழைத்திரெனவந்தாள்-மாதுக்கின் - - ௪௬௨.

னார்வருவார்சொல்லென்றேனொருபில்லைபொன்கொடுத்து *
நீர்வருவீராகிலிங்கேநிற்பானேன்-வாருமென்றாள் ௪௬௩.

முத்தனையமுத்துநகைமோகவல்லிக்குப்பணயம் - *
எத்தனைபொன்சொல்லென்றியம்பினேன்-அத்தைக்கு ௪௬௪.

முன்னூறுபொன்மகட்குமுந்நூறுபொன்னெனக்குப் - *
பின்னூறுபொன்றோழிப்பெண்களுக்குச்-சொன்ன ௪௬௫.

தொருநூறுபொன்னுமொருமுடிப்பாய்த்தந்து - *
வருவீரேல்வாருமென்றாள்மங்கை-துரைமதுரை - ௪௬௬.

வெள்ளைப்புதுவெட்டுமின்னலாயப்படியே - - *
அள்ளிக்கொடுத்தங்கனுப்பினேன்-உள்ளிருந்து - ௪௬௭.

[ஏவற்பெண்களுபசரித்தமைகூறல்.]

பைந்தாரணிகூந்தற்பைங்கனிவாய்ப்பெண்கள்சிலர் - *
வந்தார்தொழுதார்வரச்சொன்னார்-சந்தனத்தி - ௪௬௮.

கைவிளக்குக்கொண்டுவந்தாள்கால்விளக்கநல்லதண்ணீர் *
தெய்விகொண்டுவந்தாள்பொற்செம்பிலே-மைவிழியாள்.

அங்கிபிடித்தாளடைப்பைவரிசைசின்ன - - *
தங்கிபிடித்தாள்தனிப்படிக்கம்-செங்கலவை - ௪௭௰

பூசினாள்பூச்சிவந்துபூமுடித்தாள்பூவிமெல்ல - - *
வீசினாள்பொன்கவரிவெண்கவரி-ராசி - - ௪௭௧.

கைலாகுதந்தாளென்கானோகுமென்று - - *
வெயிலாள்பாவாடைவிரித்தாள்-ஒயிலாகப் - ௪௭௨.

[மனைக்குட்சென்றிருந்தமைகூறல்.]

பம்புபெருபோனுட்பகட்டறியாப்பாய்புலிபோல் - *
அம்பொனெடுமனைக்குள்யான்சென்றேன்-செம்பவளப் ௪௭௩.

போதிகைக்காலேந்துசிங்கப்பொங்கத்தங்கச்சவுக்கை - *
மீதுரத்நகம்பளவிசாலத்தில்-மோதுகரிக் ௪௭௪.

கோட்டாரக்கொங்கையார்கொண்டுவந்துதின்டருகு *
போட்டார்துரைப்பாங்குபோலிருந்தேன்-வாட்டடங்கண்.

[மதனாபிஷேகம்கண்டுஉடயசரித்தனைகூறல்.]

வட்டமிட்டகொங்கைமதனாபிஷேகமுநான் *
கட்டிவிட்டபொன்முடிப்பைக்கைக்கொண்டு-இஷ்டத் ௪௭௬

தருக்குடையேன்றன்னைவந்துசந்திக்கரண்டு *
பருக்குமெலுமிச்சம்பழங்கள்-மருக்கொழுந்துச் ௪௭௭.

செண்டுகொண்டுதன்னிடத்திற்சென்றிருந்தவென்மனதும் *
கொண்டுகொண்டுவந்துநின்றுகும்பிட்டாள்-ஒண்டொடியாள்

காதலனைச்சேர்ந்தநியாக்கன்னிபோற்சூதறியாப் *
பேதைபோற்கூசிமெள்ளப்பேசினாள். மாதவரோ ௪௭௯

மண்டபத்திலாடினேன்வந்துநின்றீருமைநான் *
கண்டுமயலாகியென்பக்கத்துளவோர்-ஒண்டொடியை ௪௮௰

மெள்ளப்போய்க்கூட்டிவாவீட்டிலென்றேன்மாரீசக் *
கள்ளிகுழப்பிக்கழப்பிவிட்டாள்-தெள்ளுதமிழ்ப் ௪௮௧.

பாட்டிலேவல்லீரென்பங்கிற்குல்தெய்வம் *
வீட்டிலுமைக்கூட்டிவந்துவிட்டதே-வீட்டில்வரத் ௪௮௨

தாங்கலேன்வாசற்றலைக்கடையினிற்பானேன் *
பாங்கியேன்வந்தாற்பணயமேன்-நீங்கணல்ல ௪௮௩.

பூவைக்கண்டேமுடித்துப்போவோமென்றெண்ணினீர் *
மேவிக்கொண்டானுன்விடமாட்டேன்-தேவரீர் ௪௮௪.

சித்தமெங்கள்பாக்கியமென்றுசெப்பினாள்சாலவித்தை *
யத்தனையுமெய்யென்றேயானிருந்தேன்-கைத்தலத்தால் ௪௮௫.

மின்னிருக்குநுண்ணிடையாள்மென்கமலக்கைபிடித்து *
முன்னிருத்திக்கொண்டுமுகம்பார்த்தேன்-கின்னரத்தைக்

கூட்டினாளேந்துமுலைக்கோட்டினாள்தந்திரியை *
மீட்டினாள்சங்கீதவெல்லச்சா-றூட்டினாள் ௪௮௭.

சொக்கேசர்மேற்கவியுஞ்சொக்கேசர்தம்பாதி *
மிக்கானவங்கயற்கண்மேற்கவியும்-தக்கபுகழ்ப் ௪௮௮.

பாண்டித்துரைமீதிற்பாட்டும்படித்ததற்பின் *
ஆண்டநிலைக்கோட்டையதிபன்மேல்-தூண்டுபுகழ்ச் ௪௮௯

சிங்காசனாதிபதிசிந்தமகுளேந்த்ரனருள் *
எங்கோன்பெரியநாகேந்திரன்மேல் - மங்கை ௪௯௰
பதம்படித்தாள்வண்ணம்படித்தாளென்காதுக் *
கிதம்படைக்குந்தேன்போலினிக்க - விதம்படைக்கும் ௪௯௧
முற்கட்டும்பாகமுஞ்சீர்மோனைகளும்பொருளும் *
பிற்கட்டுமுன்முரணும்பின்முரணும் - நற்கட்டாம் ௪௯௨
சொற்கட்டுங்கண்டுவிலைதொண்ணூறுபொன்பெறுமோர் *
கற்கட்டுமோதிரத்தைக்கையிலிட்டேன் - விற்பிடித்து ௪௯௩

[தாய்க்கிழவிகண்டுஉபசரித்தமைகூறல்.]

வாங்கினாற்போலவளைந்தவரட்டுடலும் *
தாங்கிவைத்தகாலுந்தடிக்கொம்பும் - தேங்காய்க் ௪௯௪
குடுக்கைபோல்வாயுங்கொடுவாயுஞ்சற்றே *
நடுக்குந்தலையுநரையும் - பொடிக்கொசுகு ௪௯௫
மொய்த்தகண்ணுங்காற்றுமுட்டிமுன்புறியப்பின்பறியக் *
குத்திருமல்போட்டலைக்குங்கோப்புமாய் - வித்துக்கு ௪௯௬
விட்டசுரைக்காய்போல்விழுந்துமுழங்காலதனைத் *
தொட்டமுலைத்தாய்க்கிழவிதோன்றினாள் - கிட்டவர ௪௯௭
நாணமுற்றாள்மாமியென்றுநானறியத்தன்னுடம்புக் *
கோணலுக்குள்ளேசற்றேகோணினாள் - தூங்கிதுங்கி ௪௯௮
வந்தீரோவெங்கள்வரிசைத்துரையேநீர் *
சந்தோஷமாகவிங்கேதான்வரவே - இந்தமனை ௪௯௯
என்னதவஞ்செய்ததோவென்பேதைமுன்பிறப்பில் *
என்னதவஞ்செய்திருந்தாளோ - கன்னிமுந்தா ௫௱
நாளிரவுகண்டகனாநன்மையுமென்பேதைமணித் *
தோளிடதுபக்கந்துடித்ததுவும் - ஆள்வாத்தில் ௫௱௧
காகங்கதறியதுங்கட்டைச்சிதும்பியதும் *
தோகைக்கொருகுறத்திசொன்னதுவும் - யோகம்வரப் ௫௱௨
பல்லிநிமித்தம்பலகாலியம்பியதும் *
நல்லவரைசேர்க்குமென்றுநங்கையுடன் - சொல்லிவைத்தேன்
அப்படியேவந்திரொன்றாசைமகள்குணத்தை *
இப்படியென்றேயறியீரின்னமுநீர் - பொய்ப்பிரட்டுச் ௫௱௪

சாலவித்தைப்பெண்கள் தடத்தின்மிதித்தறியாள் - *
மாலவித்தைப்பெண்கள்மனைக்கேகாள் - நானு - ௫௱௫
புரத்தையனைப்போலேபணங்காசுதேடுங் - - *
கருத்துண்டோகாயக்கங்காணேன் - ஒருத்தர்கிட்ட ௫௱௬
மானுளைவிட்டேனோமாயக்கிரந்திவந்து - - *
தானுலொருகாசுக்காகுமோ - நானீன்ற - - ௫௱௭
மாதுக்குராசவளர்ச்சியேயல்லாமல் - - - *
ஏதுமறியாள்சிறியாளின்னங்காண் - பேதைக்குக் - ௫௱௮
கொஞ்சவயதானுலுங்கூடியுமைக்கலந்து - - *
கொஞ்சவயதுகாண்கொற்றவரோ - வஞ்சிநல்லாள் - ௫௱௯
தன்மனதுக்கேற்கச்சவதரித்தாற்பொன்கோடி - *
மன்மதன்தந்தாலுமினிவாங்காள்காண் - என்மகட்குப் ௫௱௰
பாலிலேமெள்ளப்பழநழுவிவீழ்ந்தவிதம் - - *
போலவந்துவாய்த்தீர்புலவரோ - நீலியொரு - ௫௱௰௧
பேய்ப்பிளையைப்பெற்றேன்பிடிப்புவிடாமற்கொண்ட *
மாப்பிளையும்பெண்ணுமாய்வாழ்ந்திருங்கள் - மாப்பிளைக்கு.
நித்திரைக்குமெத்தநெடுநேரமாகுதுபோ - - *
தத்தைமொழியாயென்றுசன்னைசொல்லி - அத்தையரும்.
போயினார்பாங்கியரும்போயினார்செம்பவள - - *
வாயினாளுள்வீட்டில்வாருமென்றாள் - சேயிழையாள் ௫௱௰௪.

[பள்ளியறைச்சிறப்புக்கூறல்.]

முன்சென்றாள்பின்சென்றேன்முன்முகப்புவாசலிலோர் *
பொன்கொண்டிழைத்தரத்நபோதிகையோ - மின்கொண்ட
சித்ரக்கொடுங்கையோசெம்பொனிலையோகதவிற் - *
பத்தியிட்டகண்ணாடிப்பட்டமோ - கத்திரிப்பு - ௫௱௰௬.
வேலைநிறைத்தபுதுமேற்கட்டியோசுகந்த - - *
மாலைநிறைத்தவரிசையோ - கோலவச்ரக் - - ௫௱௰௭.
காலிட்டதூங்குமஞ்சக்காந்தியோபட்டாடை - *
மேலிட்டமல்லிகைப்பூமெத்தையோ - எல்லைகண்டு ௫௱௰௮.
தூங்கியதீவட்டிக்குத்தானேதயிலம்விடப் - - *
பாங்கில்வைத்தசூத்திரப்பொற்பாவையோ - தூங்குமஞ்சப்.

பக்கத்தில்வெள்ளிப்படிக்கமோபள்ளியறைத் - - *
திக்குக்குத்திக்குமதிற்சித்திரத்தில் - மைக்கருங்கட் ௫௨௰.
பெண்ணிரதிபோலாறுபேர்க்கொருவனேலீலை - *
பண்ணவெழுதிவைத்தபாவனேயோ - தண்ணளியோன் ௫௨௧.
மேற்கொண்டொருமடந்தைமிக்காமுபரிசெயக் - *
கார்க்கொண்டைபின்சரியக்காலெழும்பிப் - போர்க்கலவி ௫௨௨
யாட்டத்திற்சூதகமுமாகவெழுதிக்கழுவிற் - - *
போட்டவிதம்போலிருந்தபொங்கமே - வாட்டமுற ௫௨௩.
மோடிவைத்தபெண்கமலமுன்கைபிடித்துக்கடைக்கண் *
நாடிவைத்தாளென்றுநயம்பேசச் - சூடகக்கை - ௫௨௪
தன்னைக்குவித்துத்தலைவன்றலையிலந்த - - *
மின்னனையாள்தாடனஞ்செய்விந்தையோ - பின்னொருபாக்.
அம்பனையகண்ணியுமோராளுந்தலைமாறிச் - - *
சும்பனங்கள்செய்யுந்தொழில்விதமோ - சம்ப்ரமங்கள் ௫௨௬
சொல்லமுடியாதுதூங்குமஞ்சத்தேறினேன் - - *
மெல்லவிழுங்கொப்பத்தில்வேழம்போல் - நல்லதங்கத் ௫௨௭
[தாய்க்கிழவிவரவிட்டவரிசைகூறல்.]
தட்டிலேபாக்குவெள்ளித்தட்டிலேவெள்ளிலைப்பொற் - *
பெட்டியிலேமல்லிகைப்பூபிச்சிப்பூ - வெட்டிவேர் ௫௨௮
தந்தச்சிமிழிற்சவாதுகுர்ணப்பட்டைதனிற் - - *
கெந்தபொடிபவளக்கிண்ணத்திற் - சந்தனங்கள் - ௫௨௯
கூறுங்கிளிமொழியைக்கூடின்விடாயாறித் - - *
தேறும்பொழுதிலுண்ணச்சிற்றுண்டி - வேறுசில - ௫௩௰
சீங்கானிற்பன்னீர்பிடிசெம்பிலேவெந்நீர் - - *
தேங்காய்முலையார்சிலபேர்கொண் - டாங்குவந்து ௫௩௧.
மாமிவரவிட்டவரிசையென்றுவைத்துநின்றார் - - *
காமியவர்களைக்கண்காட்டினாள் - சேமமணி - ௫௩௨.
[படுக்கைசேர்ந்தமைகூறல்.]
வாசற்கதவடைத்தாள்மங்கைநல்லார்போனதற்பின் - *
பேசிக்குணலமிட்டுப்பேதைபோற் - கூசி - - ௫௩௩
முழிவதனங்கோட்டிவுளைதிருத்திநின்றான் - - *
புதியமணவறைப்பெண்போல - மதனுபி - - ௫௩௪

ஷேக்ஷமேயென்பிராணஸ்நேகியேதாங்காதென் *
மோகமேயென்றவளைமுந்திப்பிடித்-தேக ௫௫
சயனத்திருத்திமுகந்தன்னின்முகஞ்சேர்த்து *
நயனத்தில்வைத்தேனயனம்-தயவுவரப் ௫௬
பேசிமலர்மல்லிகைவேர்பிச்சிமுடித்துக்கலவை *
பூசிச்சவ்வாதுபுனுகணிந்து நேசம் ௫௭
பிடிக்கக்கொடுத்தாள்பிளவுதாம்பூலம் *
மடித்துங்கொடுத்தாள்தன்வாயாற்-கடித்துக் ௫௮
கொடுத்தாள்சிலசுருளைக்கொஞ்சிமடிமீதிற் *
படுத்தாள்புளகம்படைத்தேன்-எடுத்தணைத்துக் ௫௯

[அனுபோகவகைகூறல்.]

கொங்கைமுகைபிடித்துக்கொவ்வைவாய்த்தேன்குடித்துச் *
செங்கைகொடுநெகிழ்த்தேன்சேலைதனை-அங்கவளென் ௬௰
சோமனுரிந்தாள்துடைமேற்றுடைபோட்டாள் *
காமமொழுகவிட்டாள்காமியத்தைக்-காமக் ௬௧
கலைமுறையேயாலிங்கனங்களைந்துசெய்தோர் *
முலைசுவைத்துமற்றோர்முலையை-மெலநெருடிக் ௬௨
கைம்மூலமுண்டுசுவுண்மாங்கனிசுவைத்து *
மைவிழியினுவைவைத்துவாங்கினகம்-பையத் ௬௩
தலையழுத்தியுந்திதனின்மகரங்கீறிக் *
கலைவகழுத்தணைத்துக்கட்டி-நிலைமைபெறச் ௬௪
சாதிகுணங்குறிகள்தத்துவங்கள்தேர்ந்துசுக *
மாதுபருவவகைகண்டு-சோதித் ௬௫
தறிந்துபதினைந்தமிர்தநிலையாராந் *
திறங்குமிடமேறுமிடங்கண்-டறிந்துவிஷ ௬௬
ஸ்தானமகற்றியுள்ளந்தாளைவருடியின்ப *
மானவிரல்சுவைத்துள்ளந்தரங்கத்-தேனிறால் ௬௭
மெல்லமெல்லநீவிவிரல்கொண்டுசுற்றியந்த *
வல்லிமேலென்கண்வரிசிலையிற்-சொல்லும் ௬௮
அகாரஉகாரஎகாரஐகார *
இகாரக்கிணைகளைவைத்தெய்து-மகாசுகநீர் ௬௯

பாய்ந்தொழுகச்சேர்ந்தணையிற்பஞ்சகரணத்திலின்மல் *
லாந்தகரணமுதலாங்கரணம் - வாய்ந்தமகிழ் - ௫௫௰

அந்தக்கரணமவட்குமெனக்குமொன்றாய் - - *
முந்தக்கல்விட்போர்மூளவே - சந்தனப்பொற் - ௫௫௧

குங்குமகும்பகுடங்களைவென்றத - - - *
னங்கள்புயங்கள்தழும்பிறு - மூங்கிட - - ௫௫௨

மங்கைகுறங்கென்மருங்கினொருங்கவெ - - *
ணங்கைநகங்களழுந்தம் - யங்கி - - - ௫௫௩

அணைந்துகுழைந்துமெய்யன்றிவிரண்டு - - *
பிணைந்தவிதங்கள்பிணைந்து - மணங்கமழ் - ௫௫௪

ஆகமுமாகமுமாவியுமாவியும் - - - *
மோகமுமோகமுமூரலும் - ஆகவோர் - ௫௫௫

எட்டெனெட்டையிரட்டிசெய்தொகை - - *
ரட்டிசெய்திட்டவகைத்தொழில் - இஷ்டமுடன் - ௫௫௬

கண்ணாடியல்ரதியுங்காமனுங்கற்கின்றதெனக் - - *
கண்ணாடியிலொருபாற்காண்பிக்கப் - பெண்ணரசி ௫௫௭

தண்டரளப்பூண்மார்புதாங்கியுபரதியில் - - *
மண்டலம்போன்முன்னிருத்திவார்குழன்மேல் - வண்டெழுந்
சங்கீதம்பாடஸ்தங்கள்தாளம்போடச் - - [து
செங்கனிவாய்மென்குதலைத்தீங்குழல்போற் - பொங்குமுற

மங்கைநல்லாளாயிரக்கான்மண்டபத்திலாடினள்போல் *
அங்குமொருமன்மதக்கூத்தாடினாள் - பைங்குழலாள் ௫௬௰

கற்றகலைக்கூத்துங்காட்டிவலசாரி - - - *
சுற்றியிடசாரிசுற்றினாள் - மற்றுமந்தப் - - ௫௬௧

பைந்தொடிக்கைத்தாடணம்பளீல்பளீலென்றுவிழக் - *
கந்தமலர்க்கைவளைகலீலென்னக் - கந்தரத்தில் - ௫௬௨

ஒன்றுகுகுகுவென்வொன்றுகுமுகுமென - - *
ஒன்றுகுங்குங்கென்னவோசைதரக் - குன்றாத - ௫௬௩

புள்ளொலியெட்டுங்குமுறப்போதாக்குறைக்குவித்தைக் *
கள்ளிநொடிப்பின்வகைகைநொடித்தாள் - மெள்ளமத ௫௬௪

பீடத்தில்வைத்தேதன்பெருங்காமவாரிதியில் - - *
ஓடத்தில்வைத்தமயிலொப்பானாள் - கூடுகின்ற - ௫௬௫

மின்னனையாள் தன்னறிவுமெய்யும்புதுமருளும் - *
சன்னதமும்போன்மருங்குதள்ளாடச்-சின்னபின்னக் ௫௬௭

கோவைவடந்திருத்திக்கூந்தல்புறத்தொதுக்கி - *
வேர்வைவழித்துமெள்ளவீசியே-காரிகையை - ௫௬௮

முத்தமிடவொட்டாதழுக்குத்திரையைக்கழற்றி - - *
முத்தமிட்டேன்மெச்சியென்னைமுத்தமிட்டாள்-முத்தையன்

ஆமடாகொங்கைகளுக்கைந்துகிரும்வைத்தக்கால் - *
நோமடாமன்மதநன்னூல்படித்த-சாமி - - ௫௬௯

இறுகிறுகுசமயமெனவினியமொழிகுழறவிள - - *
முறுவலதுவெளிறமுலைமுனைபருக-மறுகுகொடி ௫௭௰

யிடைதுவளநுதனெளியவிலகுமிதழ்பதறவிரு - *
துடைகள்படபடெனவருசுகசலதி-கடலுடைத்துக் ௫௭௧

கொண்டபெருக்கென்னக்குபீலென்றுபாயவதில் - *
ஒண்டொடியுநானுமுருவிலியும்-தண்டாத - ௫௭௨

மெத்தையுங்கைந்நீச்சுமிதப்புமாகச்சோப - - *
நித்திரைபோய்ச்சற்றேநினைவுவந்து-தத்தரமாய் - ௫௭௩

என்கலையைச்சுற்றியிடுக்கிமுகங்கோட்டிப் - - *
பொன்கதவைத்தள்ளிப்புறப்பட்டாள்-முன்புசெலும் ௫௭௪

மோகினிபின்செல்லுமுனிபோலயான்சென்றே - *
போகநீர்ப்பன்னீராற்போக்கியே-நாகரிக - ௫௭௫

மங்கையுடன்திரும்பிவந்தேன்மலரணையிற் - - *
செங்கைவளைநெரிந்துசிந்தியதும்-அங்கவிழ்ந்த ௫௭௬

மாலையொருபக்கம்வதங்கிக்கிடந்ததும்பொன் - *
னோலையொருபக்கமொதுங்கியதும்-கோலமுத்தம் ௫௭௭

சிந்தியதுஞ்செம்பவளஞ்சிந்தியதுங்கண்டேயென் - *
சிந்தையறிவையங்கேசிந்தினேன்-வந்திருந்த - ௫௭௮

குன்றைப்பொருதமுலைக்கொஞ்சுமொழிக்கிஞ்சுகவாய் *
மன்றற்குழலிமடிசாய்ந்தேன்-என்றலையைச் - ௫௭௯

[மதனபிஷேகம்தன்னைப்புகழ்ந்தமைகூறல்.]

சுற்றிக்கிரணத்தொடிவளைக்கையாற்றனது - - *
நெற்றிக்கொருபாெனரித்திட்டாள்-கற்றதொழில் ௫௮௰

காட்டினீரையாவென்கண் திஷ்டிபட்டுதின்பம் - *
பூட்டினீர்கண்டேன்புருஷீரையும்-நாட்டிலே - ௫௮௧.
உங்களைப்போலேகலவிக்குத்தரிக்கவல்லவர்யார் - *
இங்குவரைக்காணேனிதுவரைக்கும்-தங்காத - ௫௮௨.
கோழிப்போகக்காரர்கோட்டைவாசற்காரர் - - *
சூழத்திரிவார்தொடருவார்-பாழறிவார் - - ௫௮௩
தன்போகமுந்திவிட்டுத்தப்புவரேயல்லாமல் - - *
என்போகமுந்துவிப்பாரில்லையே-அன்பரே - ௫௮௪.
ஆணெல்லாமும்மைப்போலாகுமோமுருங்கைத் - *
தூணெல்லாநல்வயிரத்தூணுமோ-வீணே - ௫௮௫.
முருக்கமலரார்தான்முடிப்பார்முடித்தால் - - *
மருக்கொழுந்தின்வாசம்வருமோ-ஒருத்தர்முகம் - ௫௮௬
பாரேனினியெனக்குப்பள்ளியறைமாப்பிளையும் - *
நீரேசரியென்றாள்நேசம்போல்-காரானைக் - ௫௮௭
[புணர்ச்சிவருத்தம்போக்கினமைகூறல்.]
கூட்டுங்கவளம்போலுண்ணக்கனிகொடுத்தாள் - *
கோட்டுங்குழலிகுழம்புப்பால்-நாட்டம் - ௫௮௮
விரும்பக்கொடுத்தாளம்மின்னுளதரக் - - - *
கரும்பைப்போலேருசிக்கக்காணேன்-திரும்ப - ௫௮௯
நடந்தகலவிசொல்லநாலுநாள்செல்லும் - - *
விடிந்துதயமெய்தினன்வெய்யோன்-மடந்தைநல்லாள் ௫௯௰
[விடிந்தபின்தன்செய்திகூறல்.]
மேலிலங்குமஞ்சள்பட்டுவெண்பூணூல்பொன்பூணூல் *
போலிலங்கக்கண்டுமனம்பூரித்தேன்-சால - ௫௯௧.
அழுந்துநகக்குறியையாடவர்கண்டேங்கச் - - *
செழுந்திரைநீர்வையையில்யான்சென்றேன்-தொழுங்குலத்து
தானவன்மேலாசையினுருவியென்றுகுப்பை - *
மேனிபிடுங்கிப்பல்விளக்கினேன்-மோனமந்த்ர - ௫௯௩.
தர்ப்பணத்தைநீக்கித்தலைமுழுகினேன்கலவி - - *
யுத்பனத்தையெண்ணியுருச்செபித்தேன்-பொற்புடைய ௫௯௪
மாயஸ்திரியைவிட்டுவந்துநெடுநேரமென்று - - *
தாயத்திரியைவிட்டேன்கர்வியைபோல்-தூயமணி - ௫௯௫

தூவுதிரைவையையிலோர் சோமன்மறந்தேன்முன் - *
காவிரியிற்போட்டகலக்கம்போல்- தீவிரமாய்ப் - ருகூ௭
போனேன்னவண்மனையிற்பொற்கொடியாள்சொற்படியோர் *
மானுளேனையழைத்துவாருமென்று-மீனாக்ஷி - ருகூ௮
யாயிவீட்டிற்சமையலாச்சுதுபோமென்றாள்நான் - *
போயிருந்துசாப்பிட்டேன்போசனத்திற்- காய்கறிகள் ருகூ௯
இன்னதென்வறியேனின்னரசமென்றறியேன் - *
கன்னிமேல்வைத்தகவனத்தால்-என்னுடைய - ருகூகூ
கையிரமாறும்முன்னேகாதலியைவந்தணைந்து - - *
சையோகவைபோகசம்போக-மெய்ப்போகம் - - சூ௱
ஆகச்சுகித்தேன்கப்பட்டேன்பார்ப்மரத்திற் - *
காகத்தையொத்தேனென்காதலால்-மோகவலைப் - சூ௱க
[தாய்க்கிழவிமருந்துகூட்டத்தொடங்கினமைகூறல்.]
பூட்டுக்குளானேனைப்போழ்வாய்ச்சிகைம்மருந்துக் - *
கூட்டுக்குளேயடைக்கக்கோப்பிட்டாள்-காட்டு - சூ௱உ
[வனமூலிகைசேர்த்தமைகூறல்.]
மருந்துவகைநாவடக்கிவாதமடக்கி - - - *
கருந்துவரைபாடவரைகஞ்சா-பெருந்தும்பை - சூ௱ங
ஆதளைமேற்புல்லுருவியாவிரைமேற்புல்லுருவி - *
மாதளைமேற்புல்லுருவிவல்லாரை-தூதுவளை - சூ௱ச
பேய்ப்பீர்க்குப்பேய்முசுட்டைபேய்ச்சிமிட்டிபேய்ப்புடலை
நாய்ப்பாகனுபுரிவிநாய்வேளை-நாய்க்கோட்டான் - சூ௱ரு
புன்னைப்பூவன்னிப்பூபூளைப்பூதாழைப்பூ - - *
முன்னைப்பூமாம்பூமுருக்கம்பூ-சின்னிப்பூ - சூ௱சு
பூலாவேர்சங்கம்வேர்புங்கம்வேர்தைவளைவேர் - *
வேலாவேர்நெட்டிவேர்வெட்டிவேர்-பாலைவேர் - சூ௱௭
அத்திக்காய்துத்திக்காயல்லிக்காய்நெல்லிக்காய் - *
கத்திரிக்காய்பேய்ச்சுரைக்காய்காஞ்சிரங்காய்-மத்தங்காய்.
தின்றுசிணுங்கிநிலம்புரண்டியாலின்கீழ்க் - - *
கன்றுபணமுறுஞ்சிகாஞ்சோறி-குன்றியிலை - சூ௱கூ
பின்றொட்டிமுன்றொட்டிபெண்டொட்டியாண்டொட்டி *
பொன்றொட்டியைவாய்ப்புலிதொட்டி-இன்பூறல் - சூ௱௰

ஆனைவணங்கியமுகண்ணிதொழுகண்ணி - - *
பூனைவணங்கிபுளிமடலை - உண்ணு - - - ௩௱௰௧.
தலைசுருளிநன்னாரிதான்றிவெள்ளைத்தோன்றி - - *
மலைகலக்கிதேள்கொடுக்குவாகை - யிலைகருநா - ௩௱௰௨
ரத்தங்காய்ப்பிஞ்சுதமரத்தம்பூப்பிஞ்சுமலை - - *
நத்தைச்சூரிக்கொழுந்துநாட்டகத்தி - சிற்றகத்தி ௩௱௰௩
தோதகத்திபட்டநன்னாத்தோதகத்திபஞ்சமா - - *
பாதகத்திசூரியனைப்பாய்ப்பணியும் - போதிற் - ௩௱௰௪.

[கடைச்சரக்குச்சேர்த்தமைகூறல்.]

சுருத்துவகையாய்த்தேடிக்கட்டிக்கடையில - - *
மருத்துவகைக்கஸ்தூரிமஞ்சள் - அரைத்தசித்ர - ௩௱௰௫
மூலஞ்செவிட்டாதிமூலங்கடையினிற்றக் - - *
கோலந்தாம்பூலங்குரோசாணி - எல்லிவெலி - ௩௱௰௬
காரஞ்சீனக்காரங்கர்ப்பூரசாரமரி - - - *
தாரநவாசாரஞ்சவுக்காரம் - காரீயம் - - ௩௱௰௭.
துத்தந்துரிசுதுருசாவசப்படுத்தும் - - - *
கொத்தமல்லிவாய்விளங்கங்குங்குமப்பூ - முத்தக்கா ௩௱௰௮
செட்டுப்பணவிடையித்துப்புவெடிவாணவுப்புக் - *
கட்டுப்புவீட்டிடிற்கறியுப்பு - மட்டிப்பால் - ௩௱௰௯
இஞ்சிலவங்கமிதன்பத்ரிசிங்களத்தோர் - - *
கஞ்சியிலேபோடுங்கசகசா - மஞ்சள் - - ௩௱௨௰.
அதிமதுரமாசையதிமதுரமாக்கும் - - - *
சதகுப்பிசாதிக்காய்சாபத்ரி - அதிவிடயம் - - ௩௱௨௧.
பாக்குச்சிறுதேக்குப்பாஷாணம்வேப்பம்புண் - *
ணாக்குதிருவிஷமுள்ளாவியும்புண் - ணாக்குபச்சை - ௩௱௨௨.
நாவியபினிமுதலானுமுழநாலுமுலைப் - - *
பாவிசவ்தரித்துப்பாரிலுள்ள - சீவன் - - ௩௱௨௩.

[பிராணிகளினுறுப்புகள்சேர்த்தமைகூறல்.]

மருந்துவகைசெவ்வரணைவாலாந்தைப்பிசசு - - *
பருந்துநகமுதலைப்பல்லு - குரங்கிற் - - ௩௱௨௪.
திரியமாவட்டைசெவ்வட்டைபெட்டை - - *
நரிமுதுகுத்தோலும்புநாக்கு - குருகு - - ௩௱௨௫

முனைவாய்கருஞ்சேவன்முள்ளுவெள்ளைப்பல்லி *
சிணவலியாண்காடைச்சிறகு-பனையடியிற் ௬௨௬
குன்றன்கண்வாகைமேற்கூகைகீழ்வாயலகு *
செந்நாய்ப்பவனவாய்தேவாங்கு-கன்னம் ௬௨௭
வலியான்கழுத்துமணிக்காடைமுட்டை *
யெலிமூளையன்றியிறைச்சி . புலிமீசை ௬௨௮
வல்லூற்றுவல்லெலும்புமாடப்புறாவினெச்சம் *
கல்லூரிக்கொம்புகவரிமயிர் - நல்லபாம் ௬௨௯
பீரறலையிற்றெருமையிளங்கொடிசெம் *
பூரமுசற்புழுக்கைபுற்றின்மேல்-தேரைக்கால் ௬௩௰
தூக்கணன்குஞ்சுசுழல்வண்டுநண்டுகருங் *
காக்கைநிணங்காராக்கருமுலைப்பால்-நாக்குப் ௬௩௧
புழுப்பூனைப்பீசம்பொலிப்புக்கடாவின் *
கொழுப்புப்பெருச்சாளிக்குட்டி-பழுத்தமர ௬௩௨
வவ்வாற்றலைகுதிரைவாயினுரைகரடிச் *
சவ்வுகிழவானைமதஞ்சங்கினூன்-நவ்விரத்தம் ௬௩௩
கன்னிகழியாதபிள்ளைகாதிற்சிறுகுறும்பி *
தன்னையறியாள்தலையிற்பேன்-சின்னவட்டை ௬௩௪
வாற்குருவிச்சந்தெலும்புவானம்பாடிக்குடலுள் *
ளூர்க்குருவிக்கொக்கரைதன்னூருக்கு-மேற்குக் ௬௩௫
கரட்டோரித்தொண்டைகரட்டோந்திமண்டை *
வரட்டோரிதேடிவகையால்-நிறுத்து ௬௩௬

[மருந்துகூட்டினமைகூறல்]

வணமருந்தெல்லாந்தயிலம்வாங்கிக்கடையிற் *
கனமருந்தெல்லாம்பேய்க்கரும்பு-தனில்வடித்த ௬௩௭
சாற்றிலரைத்துத்தசையூனைத்தாழியிலே *
யூற்றியசாராயத்திலூறவைத்துச்-சோற்றடுப்பிற் ௬௩௮
செம்பிப்புதைத்துமறுதிங்களிலெல்லாமருந்தும் *
அம்பியிலேயிட்டுமசளல்குலினீர்-செம்மைதரும் ௬௩௯
நாக்கிலழுக்குநகத்தழுக்குக்காலடிமண் *
மூக்கில்வெயர்வும்விட்டுமூன்றுநாள்-தாய்க்கிழவி ௬௪௰

[ஔஷதப்பிரயோகம்செய்தமைகூறல்.]

மைப்போலனாத்துருட்டிமங்கைநல்லாயிந்தவுண்டை - *
தப்பாதெனக்கொடுத்தாள்சர்ப்பனையால் - அப்பளத்தில் ௯௪௧

[மதிமயக்கமிகுந்தமைகூறல்.]

இட்டாள்பழத்திலேயிட்டாள்சுண்ணாம்பிலே - - *
இட்டாள்மதிமயக்கமெய்தினேன் - விட்டிருக்கக் - ௯௪௨
கூடாதுகண்ணுறக்கங்கொள்ளாதுசாப்பாட்டைத் - *
தேடாதுவேறுமனஞ்செல்லாது - பேடனையாள் - ௯௪௩.
மோகசமுத்திரத்தில்மூழ்குவதல்லாதுபிர - - *
வாகநதியைமறந்துவிட்டேன் - மோகனஞ்செய் - ௯௪௪.
சித்தசனன்மந்த்ரகலைதேர்ந்தறிவதல்லாது - - *
நித்யசெபமந்திரத்தைநீக்கினேன் - தத்துவரிக் - ௯௪௫
கண்ணிசெபுமோடிக்குக்கால்பிடிப்பதல்லாது - - *
புண்யநமஸ்காரங்கள்போட்டுவிட்டேன் - பெண்ணணங்கின்.
செங்களபக்கொங்கைதெரிசினமல்லாதுசிவ - - *
லிங்கதெரிசினத்தைநீக்கினேன் - அங்கசவேள் - ௯௪௭.
மாபூசைவேளையவள்வாயமிர்தமுண்பதல்லால் - - *
மேதபூசைமேற்கவனந்தீர்ந்துவிட்டேன் - சோபமுற்ற ௯௪௮.

[வஞ்சிக்கஉபாயம்செய்தமைகூறல்.]

நாட்டமறிந்தென்னைநகைக்கிழவிமெல்லவொரு - *
மூட்டகந்தான்பேசினாள்பொன்பறிக்கத் - தாஷ்டிகமோ ௯௪௯.
ஆடித்திருநாளழகருக்கின்றுகுதந்த - - - *
வேடிக்கைபார்க்கவெகுசனங்கள் - கூடியே - - ௯௫௦.
செல்கின்றார்நீங்களும்போய்த்தீர்த்தத்திலாடிவந்தால் - *
நல்லபலனெங்களுக்குநண்ணுமே தோ - கல்வியீர் - ௯௫௧.
என்றாளவ்வார்த்தைக்கிருந்தாலதிவிலியாம் - - *
சென்றாலுமங்கைமேற்றேட்டாமாம் - என்றுசெழுந் ௯௫௨
தேனேமதனபிஷேகமேநீவருவை - - - *
யானுற்றிருநாட்கழகென்றேன் - நானுமும்மைக் - ௯௫௩.

[திருவிழாவுக்குச்சென்றமைகூறல்.]

காணுதிருந்தாலென்கண்ணுறங்குமோவென்று - *
பூணார்முலையாள்புறப்பட்டாள் - பாணிப்பாய் - ௯௫௪.

பித்தளையினாலுடைமைபெண்ணுக்குப்பூட்டிவரட் - *
டத்தைதொடர்ந்தாளடிப்பிறகே - பத்துப்பேர் - ௬௫௫

பாங்கியருமின்றிவரும்பாவையுடன்சென்றழகர் - *
ஓங்குமலைத்தீர்த்தமுவந்தாடிப் - பூங்குழலாய் - ௬௫௬

மானுங்கலையுநரைமந்தியும்போலேயிறங்கித் - - *
தேனுந்துபூந்துளபச்செங்கண்மால் - தானேறும் - ௬௫௭

தேருக்குப்பின்னாகச்சென்றேமோர்பாணவிசைத் - *
தூரத்தேஞானியையன்தோன்றினான் - தேருக்குப் ௬௫௮

பக்கத்திலேயொதுங்கிப்பாந்தினேனப்புறத்தோர் - *
தக்கமறையோன்மனையிற்றங்கினேன் - ககத்தில் - ௬௫௯

தூக்கிட்டதோசைச்சுமையுமடிதனிலே - - *
பாக்கிட்டகைவாளப்பையுமாத் - தாய்க்கிழவி - ௬௬௰

மாதைத்தொடர்ந்துவரமங்கையெனைப்பின்றொடரப் *
பாதைவழிகொண்டேன்பரிசுடனே - பாதை - ௬௬௧

[திரும்பிவருகையில்மோசஞ்செய்தமைகூறல்.]

அரைநாழிகைக்கப்பாலத்தைகுறுகி - - - *
வரைமுலையாய்மறந்தேன் - சரிகையிட்ட - ௬௬௨

சேலையென்றுளோடித்திரும்புகிறேனில்லுமென்று - *
வாலியப்பெண்மேலென்மனங்கிடக்கக் - காலிற் - ௬௬௩

கடுமையுளவோட்டமெல்லாங்காட்டினேனென்பின் - *
குடியிலேதட்டக்குதிக்கால் - விடுதியிற்போய் - ௬௬௪

மீனாமுன்னமங்கையிட்டவெற்றுடைமையைக்கழற்றிப் *
பிணைதன்னுங்கண்ணிபிழைகேடி - ஆனுடனே - ௬௬௫

போனாள்மதுரைக்குப்போய்த்துகிலைநானெடுத்து - *
மானைத்தேடிவருப்வேளை - தேனனையாள் - ௬௬௬

ஊரின்முருங்கையுருவியகோல்போனின்றாள் - - *
மாரியெனக்கண்ணீர்வழிந்தோடக் - காரிகையே - ௬௬௭

என்னென்றேன்விம்மிவிம்மியேக்கப்போனாக்குழறி - *
முன்னின்றுமெள்ளமொழியலுற்றாள் - அன்னே - ௬௬௮

வருவார்நம்மையர்வழியிற்பறியார் - - - *
திருநாட்சனத்துடனேசெல்வோம் - அரிவையே - ௬௬௯

வாவென்றாள்விட்டுவரமாட்டேனானீபயந்தாற் - *
போவென்றேன்கோபமாய்ப்போயினாள் - கூவென்றாற் ௱௭௰
கேள்வியுண்டோவந்தால்கிழவனொருவனையா - - *
போழ்வாய்நரைத்தலையன்பூண்கட்டு - நீளத் - ௱௭௧
தடிக்கொம்புக்காரன்தனிவழியிலென்னை - - *
அடித்துப்பறித்தானகன்றான் - திடுக்கிட்டேன் - ௱௭௨
என்றாளைத்தேற்றியதற்கென்னமேனுன்னதிர்ஷ்டம் - *
ஒன்றுமேலக்ஷ்முடைமையாம் - நின்று - - ௱௭௩
வருந்தாதேயென்றுமதுரைக்குவந்து - - - *
திருந்திழையாள்வீட்டிலேசென்றேன் - மருந்துருட்டி ௱௭௪
அங்கேவந்தாள்மகளையாவலாய்ப்பார்த்துடைமை - *
எங்கேயென்றாள்பறிபோச்சென்றுரைத்தாள் - செங்கை ௱௭௫

[தாய்க்கிழவிபொய்ப்புலம்பல்கூறல்.]

நெரித்தாள்பதறிநெரித்தகையைவிட்டுப் - - *
பிரித்தாள்வயிற்றைப்பிசைந்தாள் - ஒருத்தருமில் - ௱௭௬
லாதவிடத்துடைமைக்காசையாயுன்னுயிரைச் - - *
சேதப்படுத்திலென்னசெய்வேனான் - பேதை - ௱௭௭
மகளேயெனக்கதறிவாய்விட்டழுது - - - *
வெகுவாய்ப்பிரதவித்துவிம்மி - நகைகளெல்லாம் - ௱௭௮
போச்சுதேகோயிலுக்குப்போகவரத்தடையொன் - *
றாச்சுதேயூருமறிந்ததே - ஏச்சொன்று - - ௱௭௯
வந்ததேபண்ணிமறித்துமிடக்காசுபணம் - - *
சிந்துதோகண்டேனுன்தேட்டைநான் - வந்தடித்துக் ௱௮௰
கள்ளர்பறித்தநகைக்குவருமோவுடைமை - - *
உள்ளதெல்லாம்ரத்நவுடைமையே - அள்ளியள்ளி ௱௮௧
எண்ணியிட்டசெம்பொனிருநூறுநான்கொடுத்துப் - *
பண்ணியிட்டகொப்பும்பறிபோச்சே - புண்ணியவான் ௱௮௨
திக்கடையவெற்றிகொண்டசிந்தமகேந்திரனிட்ட - *
கைக்கடகம்போலுமினிக்காண்பேனோ - விக்ரமகோ ௱௮௩
தண்டசரபாணிதுரைச்சாமராயன்கொடுத்த - - *
கண்டசரமேனிவட்குக்காட்டினேன் - அண்டலரை ௱௮௪

வெட்டியவாள்வீரன்விருபாக்ஷியான்கொடுத்த - *
ஒட்டியாணம்போலவுண்டாமோ-சிட்டர்புகழ் - ௩௮௫.
ஆணிக்கனகநிதியப்புராயன்கொடுத்த - - - *
மாணிக்கமாலையைப்போல்வாய்க்குமோ-வாணர்புகழ் ௩௮௬.
அம்மையப்பராயன்கொடுத்தவாணிமுத்துத்தாழ்வடத்தைக் *
கொம்மைமுலையாட்கேன்கொடுத்தேனோ-நம்முடைய ௩௮௭
வல்லக்கொண்டையனருள்வச்ரக்கணையாழிக் - - *
கல்லுக்கொருவர்விலைகாண்பாரோ-வல்லிசெய்த - ௩௮௮
கின்னரிப்பாட்டுக்குக்கெடிக்காமையன்கொடுத்த - *
பொன்னரைஞாண்போற்கிடைக்கப்போகுதோ-மன்னர்புகழ்
கச்சுமுலையாளுக்குக்காளிங்கன்முன்கொடுத்த - *
பொற்சிமிக்கிப்போற்கிடைக்கப்போகுதோ,குச்சிலியக் ௩௯௰
கெங்காசிராவளித்தகெம்பிழைத்தமோதிரம்போல் - *
இங்கார்கொடுப்பார்சொலேந்திழையே-மங்கைபுரி ௩௯௧.
நாட்டியத்தைக்கண்டுமெச்சிநத்தத்துலிங்கேந்த்ரன் - *
போட்டகொலுசெண்ணூறுபொன்பெறுமோ-வாட்டமில்லா
கோதனகவதனன்கோபாலராயனருள் - - [க்.
மோகனப்பொன்மாலைமுற்றுமோகனமே-போகத் ௩௯௩.
திருமலைக்கண்டமன்னன்றந்தருள்சிந்தாக்கை - *
இருமுலையாட்கேன்கழுத்திலிட்டேன்-கருணைநிதி ௩௯௪.
பூசாரிராயனிட்டபொற்சவளிபோலவுமோர் - - *
ஆசாரியண்ணவறிவானோ-தேசமெச்சும் - - ௩௯௫
போடிமகிபன்கொடுத்தபொற்சுட்டிகட்டிவிட்டுப் - *
போடியென்றேனென்னமதிபோனேன்யான்-தாடகையை.
அம்பிற்பொருராமபத்ரதுரையன்றுதந்த - - *
தும்பிப்பதக்கவிலைசொற்பமோ-சொம்புபெறும் - ௩௯௭
நாடகத்தைக்கண்டுமெச்சிநம்முத்தையனளித்த - *
பாடகத்தைக்கண்டாற்பசிபோமே-நாடுபுகழ் - ௩௯௮.
தொட்டராயன்கொடுத்தசோடுவச்ரவோலையும்பொற் *
பட்டயமரைஞாணும்விலைபண்ணுவதோ-வெட்டுகின்ற ௩௯௯
வாளுலவுஞ்செங்கண்மடந்தைபொட்டுக்காறையெந்த - *
ஆளுவன்வீட்டிலிருக்குதோ-தாளவட்டப் = = ௪௱

பூணூர்முலையாட்குப்போட்டவெள்ளித்தண்டையெந்தச் *
சாணானவளவிற்போய்ச்சார்ந்ததோ-வீணையென் - ௭௱௧.
மானனைக்கொள்ளைகொண்டோன்வச்ரமுருகையெந்தக் *
கோனான்றன்கையிற்கொடுத்தானோ-ஆனாலும் - ௭௱௨
மூவைந்தாம்பாட்டிகண்டமூக்குத்தனுக்கையென்ன - *
பூவென்றெங்கேயெறிந்துபோட்டானோ-பாவைநல்லாய் ௭௱௩
என்னசெய்வோநாமினிமேலென்றாள்கிழவியையும் - *
கன்னியையுந்தேற்றிக்கணக்கேற்றி-அந்நேரம் - ௭௱௪

[அணிசெய்திட்டமைகூறல்]

ஐயாயிரம்பொன்னவல்போலப்பார்வையிட்டுக் - *
கையாரத்தட்டான்கடையிலிட்டுச்-செய்த- - ௭௱௫
உடைமையெல்லாமந்தவுருப்படியேயிட்டு - - *
வடிவையெல்லாம்பார்த்துமகிழ்ந்தேன்-கொடியிடையை.
மஞ்சத்திற்கூடிமகிழ்ந்திருக்கும்போதொருநாள் - *
பஞ்சொத்தகூந்தலாள்பையவந்து-வஞ்சியே - ௭௱௭
கோயிலுக்குப்போவென்றாள்கோடியில்லைசேலையெல்லாம் *
சாயமில்லையென்றுசலிப்பானாள்-பேயே - ௭௱௮.
பிறந்தவூருக்குப்புடவையேணம்மை - - - *
அறிந்தவரோயல்லான்மற்றூர்காண்-நறுங்குழலாய் - ௭௱௯
பொன்னின்குடத்துக்குப்பொட்டிடலேன்போவென்றாள் *
அந்நேரமாதையழைத்துப்போய்-நன்னிசெட்டி - ௭௱௰.

[ஆடைவாங்கிக்கொடுத்தமைகூறல்.]

கட்டுவர்க்கச்சேலைக்கடையிலிடைக்கிசைந்த - - *
பட்டுவர்க்கம்பார்த்துப்பளபளப்பாம்-மட்டுவர்க்கப் ௭௱௰௧
பாவாடையிட்டமொழிப்பாவைக்குப்பொன்ரவிக்கை - *
பாவாடைவர்க்கம்பதினாறு-மேவியிரு - - ௭௱௰௨.
செப்புவர்ணப்பூமுலைக்குச்செம்பருத்திப்பூநிறத்துக் - *
கொப்புவர்ணமாய்த்தீர்ந்தகோப்புவர்ணம்-இப்புவியில்.
ஆசிவர்ணம்போலுமழகுடையாளுக்கிசைந்த - *
ஷீதிவர்ணச்சேலையொன்றுவிந்தையாம்-வாதுமத ௭௱௰௪
பாணத்தார்க்கூந்தற்பவளவாய்ப்பைந்தொடிக்கு - *
வாணத்தார்ச்சேலைவகைமூன்று-வேணுமணி - ௭௱௰௫

முத்துவர்ணபூரணல்லாள்மூலைக்குள்வைத்துடுக்க - - *
முத்துவர்ணச்சேலையிலேமூன்றுவகை - வைத்ததிருச் ௭௱௰௬.

சூரணவர்ணத்திலகுசுட்டிநுதலாட்கிசைந்த - - *
நாரணவர்ணச்சேலைநாலைந்து - போரிற் - - ௭௱௰௭

படைமுறிச்சுக்குத்தியகட்பாவையாள்கட்ட - - *
உடைமுறிச்சுக்குத்தியிலேயொன்று - தொடையல் ௭௱௰௮.

சொருகுமணிக்குழலாள்சோடிணையாக்கட்ட - - *
அருகுமணிச்சேலையிலேயஞ்சு - பிரிவுகொண்டு - ௭௱௰௯.

செல்லாச்சேலைப்பொருங்கட்சேயிழையாள்கட்டநல்ல - *
சல்லாச்சேலைத்தரமாய்த்தானிரண்டு - மெல்லமெல்ல ௭௱௨௰

வாளெழுத்தோளாடவளைமாலெழுத்துவாளுடுக்க - *
ஆளெழுத்துச்சேலையிலேயாறேழு - நீளெழிலசேர் ௭௨௧.

சுந்தரத்தோண்மங்கைக்குத்தொட்டிழுத்துக்கட்டநல்ல *
சந்திரகாந்தக்கச்சுதானைந்து - அந்தரத்தில் - ௭௨௨.

இந்திரகாவிற்குலவுரம்பையனையாட்கிசையச் - *
சந்திரகாவிச்சேலைதானிரண்டு - சிந்துமழை - ௭௨௩.

மாரிக்கொடியின்மருங்கிற்கிணங்கியகஸ் - - *
தூரிக்கொடிச்சேலைசோடிரண்டு - காரிகைக்குக் - ௭௨௪.

காங்குசரிகைச்சேலைகம்பாவரித்துகில்பட் - - *
டாங்குகம்பிச்சேலையனைவர்ணம் - தாங்குசிலம் - ௭௨௫

பெச்சரிகையென்னுமிடைக்குச்சரியிதென்றற் - - *
குச்சரிகைவர்க்கமெல்லாங்கொண்டந்தேன் - உச்சிதமாத்.

தாய்க்கிழவிகேட்டாள்தனக்கிரண்டுசேலையந்தப் - *
பேய்க்குதவாவிட்டாற்பிழைப்பேது - பாக்களந்த ௭௨௭.

[பலவகைக்கடன்தீர்த்தமைகூறல்.]

வன்னியென்றும்பாலளந்தமாரியென்றுநெய்யளந்த - *
சின்னியென்றுநெல்லளந்தசெல்லியென்றும்,எந்நேரம் ௭௨௮

வைவதுவும்போவதுவும்வாசலிலேநின்றலம்பல் - *
செய்வதுவும்போலிட்டாள்சித்திரிப்புக் - கைமேலா ௭௨௯

அந்தக்கடன்காரர்க்கென்றேநானைம்பதுபொன் - *
இந்தக்கடன்காரிக்கீந்துவிட்டேன் - அந்திசந்தி - ௭௩௰

தாய்குடிக்கப்பெண்குடிக்கச்சாராயமூற்றிவெறிப் - *
பேய்பிடிக்கவிட்டநெட்டைப்பிச்சிவந்து - நீயாயமோ ௭௰௧
தப்பறைக்காரியென்றுசண்டைக்குவாய்திறந்தாள் - *
முப்பதுபொன்போட்டுவாய்மூடிவிட்டேன் - செப்புமுலை.

[தெய்வபூசைக்குக்கொடுத்தமைகூறல்.]

மங்கைவயிற்றைவலிக்குதென்றுமார்க்கமிட்டாள் - *
அங்கைதொட்டக்கால்திகமாகுதென்றாள் - எங்கள் - ௭௰௩
குலதெய்வம்பண்ணுந்திந்தக்கோட்டாலையென்றாள் - *
கலைகுலைந்துசோர்வதையுங்காணாள் - சிலைநுதலாய் - ௭௰௪
தெய்வகுறைக்கென்னசெய்யவேணுஞ்சொலென்றேன் *
கையிலறிவாளுங்கட்டளையாச் - செய்த் - - . ௭௰௫
உருவேணும்பொற்சுற்றுமாலைவேணும் - - *
இருகாலுக்குச்சிலம்புமீணாப் - புருவைகளும் - ௭௰௬
செந்தேசலும்வேணுஞ்சேவிக்கும்பம்பைக்கோர் - *
அஞ்சாறுபொன்வேணுமாடிவரக் - குஞ்சமிட்டுப் - ௭௰௭
பூங்கப்பனையெடுத்துப்பூசையிடவேணுமென்றாள் - *
ஆங்கப்படிக்கீந்தேனைம்பதுபொன் - தாங்கருங்கண் ௭௰௮

[தன்கையிருப்பைவைத்திருக்கக்கொடுத்தமைகூறல்.]

வாளைதாவுங்காதுநல்லாய்நான்கேட்ட - - *
வேளைதாவென்றவடன்வீட்டிலே - ஆழாக்கு - ௭௰௯
முத்துவைத்துவைத்தேன்மூடிப்பாவோராயிரம்பொன் *
வைத்துவைத்தேன்பின்னுமொருமாணிக்கம் - சித்திரக்காற்.

[பின்னும்பலவிதத்தால்வஞ்சித்]
[துப்பொருள்கவர்ந்தமைகூறல்.]

கட்டிலென்றுங்கட்டிலின்மேற்கட்டிசகலாத்தென்றும் *
வட்டிலென்றுஞ்சிப்புவகையென்றும் - கட்டுமட்டாம் ௮௰௧
குத்துவிளக்கென்றுங்குட்டப்பாலெருமையென்றும் - *
பத்தணையேனென்றும்பசுக்களென்றும் - மெத்தையென்றும்.
மச்சுவீடென்றுமணிக்குதிர்களென்றுமங்கை - - *
மெச்சிவிளையாடிநிற்கமேடையென்றும் - க்சிறுக்குங் ௮௰௩
கொங்கைச்சிமிழ்மாதுகூடப்பிறந்தசின்ன - - *
தங்கச்சிக்கால்களுக்குத்தண்டையென்றும் - இங்கிதமாய் ௮௰௪

ஆடவிட்டநட்டுவனார்க்கங்கியென்றுஞ்சங்கீதம் - *
பாடவிட்டபாடகற்குப்பாகையென்றும் - சேடியர்க்குக். ௭௪௫
கம்பிகுறிச்சேலையென்றுங்காதோலையென்றும்வெள்ளித் *
தம்பிக்கையென்றுந்தபலையென்றும் - செம்பென்றும் ௭௪௬
தங்கச்சிமிழிற்சவாதென்றுமாண்டியப்பன் - - *
கந்தபொடியென்றுங்கதம்பமென்றும் - சந்தனங்கள் ௭௪௭
என்றுமாடிக்கழிவுக்கேற்றதென்றுந்தைப்பொங்கற் - *
கென்றுஞ்சிவராத்திரிக்கென்றும் - நின்று - ௭௪௮
தலைதடவிழுளைதனையுறுஞ்சுவார்போற் - - *
பலவிதமாயேய்ச்சுப்பசப்பிக் - கலவையணிந் - ௭௪௯
தோங்குமிளமுலையாளுனிருக்கவேயுயிரை - - *
வாங்குவதுபோற்பொருளைவாங்கிவிட்டாள் - சோங்கிலிட்டுக்.
கட்டியசெம்பொன்னைக்கடலிற்கவிழ்த்ததுபோல் - *
ஒட்டொழியத்தோற்றுவிட்டேனுள்ளதெல்லாம் - இட்ட ௭௫௧
மருந்தாலிருளுமருளுங்கொண்டாற்போல் - - *
இருந்தேன்கொடுக்கவகையின்றி - உரிந்து - ௭௫௨

[விற்றிறுத்துவெறுங்கையனானமைகூறல்]

கலைவிற்றேன்காதிற்கடுக்கனையும்விற்றேன் - - *
மெலிவுற்றேன்தாய்க்கிழவிவீட்டுச் - செலவுக்குத் - ௭௫௩
தத்தரமாக்கேட்டாள்தலைகவிழ்ந்துநான்துரும்பு - *
குத்துவதைக்கண்டாள்குறிப்பறிந்தாள் - எத்தியென்னைத் ௭௫௪
தாளைவிட்டவேல்விழியாள்தாய்க்கிழவிவார்த்தையைக்கேட் *
டோளைவிட்டுப்போக்கவுபாயமிட்டாள் - சேரவென்றும் ௭௫௫

[தூரத்தவகைதேடினமைகூறல்.]

மின்புறங்காட்டுஞ்சயனமேற்படுத்தாலென்புறத்திற் - *
பின்புறங்காட்டிப்படுப்பாள்பேசாமல் - அன்புடனான் ௭௫௬
செய்யாவுபசாரஞ்செய்யப்போனாலுமுழங் - - *
கையாலிடிப்பாள்கடிப்பாய்ப் - பையவே - ௭௫௭
அன்னைவந்துதன்னையழைக்கச்செறுமுமந்த - - *
சன்னையறிந்தென்னைவிட்டுத்தானேகிப் - பொன்முடிப்பு.
வாங்குவதுங்கூடுவதும்வந்தெனருகிற்படுத்துத் - *
தூங்குவதுமாகத்தொழிலெடுத்தாள் - யாங்கியரிற் ௭௫௯

[மதனுபிஷேகம்தன்னைஎசினமைகூறல்.]

கோப்புடையமாயக்குருவியைவிட்டுப்பழைய - *
மாப்பிளைமார்தம்மைவரச்சொல்லிப் - பேய்ப்படுவாய் எசுO.

அன்னியராய்வந்தாலருகிற்போய்நானிருந்தாற் - *
சன்னைதெரியாதோசவுங்கலே - என்னடா - - எசுக.

போடாவெளியிற்புதுமண்டபத்திருந்து - - - *
வாடாவெனச்சொல்லுவாள்மட்டுமிஞ்சி - ஓடியங்கள் எசுஉ

சொல்லத்தொடுத்தாள் துரத்திடினும்பூட்டியசெக் - *
கெல்லைவிட்டுப்போகாவெருதானேன் - மெல்ல - எசுங.

[தாய்மகளைஎசினமைகூறல்.]

மகளையழைத்துமருந்துருட்டிசொல்வாள் - - *
தகல்பாஜிப்பார்ப்பான்சதமோ - முகமாயம் - எசுச.

என்னசெய்தானீயவனுக்கேற்றவுடம்படிக்கை - *
என்னசொன்னுய்பார்த்தவருக்கேற்குமோ - மின்னே எசுரு.

கொடுக்குமட்டும்வாங்கிக்கொடாதிருந்தால்விட்டு - *
மூடுக்கலல்லோவேசிமுறைமை - எடுப்பார்கைப் - எசுசு.

பிள்ளையோநீயுமென்னபேய்ப்பிள்ளாய்மாப்பிளைமார் *
கள்ளரைப்போலேதிரியக்காரணமேன் - மெள்ளமெள்ள எசுஎ

ஓடங்கடக்கவிட்டாலோடக்காரன்றலையிற் - - *
போடுவதுசொட்டென்பார்பூதலத்தோர் - வாடீ - எசுஅ.

சிலைநுதலாய்நானுனக்குச்சேர்த்தமருந்துக்கு - *
மலையுநகர்ந்துவருமே - முலைவயிற்றைத் - எசுகூ.

தொட்டதோகன்னஞ்சுரிந்ததோகூந்தனை - - *
யிட்டதோமேனியிளைத்ததோ - தொட்டவனை - எஎO.

விட்டுப்பிரிந்தக்கால்வேறுபிழைப்பிலையோ - - *
முஷ்டிவாங்கிப்பயலோமோப்பாச்சு - கெட்டிகெட்டி எஎக.

ஊணைவிடப்பற்றென்றுளுதாரிவீட்டிறப்புக் - *
கூணையிலொன்றிக்கேட்டுக்கொண்டேனுன் - மேனைதப்பி எஎஉ

[சண்டையிட்டமைகூறல்]

நன்றிமறந்தாரைநடுக்கேட்குமோதெய்வம் - - *
ஒன்றுசொல்லிவந்தேனெதிரோநான் - என்றவுடன் - எஎங.

ஆங்காரமிட்டாளென்றாஸ்தியெல்லாந்தன்கையால் - *
வாங்காமல்வாங்கிவிட்டமாமியார் - ஆங்குவரும் - ௭௭௪
பேய்மடையர்பொன்றாம்பெருங்குளத்துநீரைத்தன் - *
வாய்மடையாலேயுறுஞ்சுமாமியார் - ஈயாரைப் - ௭௭௫
புல்வாயைக்கண்டபுலிபோலப்போய்ப்பிடிக்கும் - *
வல்வாய்க்கிழநெட்டைமாமியார் - பல்லுவிழுங் - ௭௭௬
கோப்புளதன்மூப்பைக்கொடுத்திளமைவாங்கமொட்டை *
மாப்பிள்ளைமாரைத்தேடுமாமியார் . கேப்பைக்கும் ௭௭௭
பிஞ்சுமாங்காய்க்கும்பிளவுக்கும்வெற்றிலைக்கும் - *
மஞ்சளுக்குஞ்சஞ்சரிக்குமாமியார் - மஞ்சத்தே - ௭௭௮
தேற்றித்தனைமுன்புசேர்ந்தபணக்காரர்முறை - *
மாற்றிமகளுகளைக்குமாமியார் - போற்றிவைத்த ௭௭௯
காசழியாமற்றிரியுங்காவிப்பற்காரரைத்தன் - - *
வாசலமிதிக்கவொட்டாமாமியார் - ஆசைகொண்டு ௭௮௰
சேயிழையைச்சேர்ந்தவரைத்தேற்றிக்கழுத்தறுக்கும் - *
ஆயுதம்போலுங்கருநாக்கத்தையார் - மேயவொரு ௭௮௧
செம்பிலேதண்ணீருஞ்சீலைப்பாயுங்கொடுபோய் - *
அம்பலத்திலேபடுக்குமத்தையார் - வெம்புலிபோல் ௭௮௨
தாஷ்டிகரையும்பிடித்துத்தாலக்கத்திம்மாவென் - *
றூடடிப்பணம்பறிக்குமத்தையார் - மோட்டுப் - ௭௮௩
பொலிப்பாட்டைப்போலேபுறப்பட்டாளென்று - *
பொலிப்பாட்டுப்பாடப்புகுந்தாள் - வலுத்தவர்போல் ௭௮௪
என்னசொன்னாய்பார்ப்பானீயின்னமொருக்காற்சொல்லு *
கன்னத்திலேயறைவார்காணேனே - சின்னஞ் - ௭௮௫
சிறுக்கியுனக்குநன்றாச்சிக்கினாளோநான் - - *
சிறுக்குப்பிடித்தகிழவி - உறுக்கி - - ௭௮௬
வசமாக்கவல்லோவகைசெய்தாய்வைப்பு - - *
நிசமாச்சோகுல்லாவிநீயோ - பசிவேளைக் - - ௭௮௭
கேதுகொடுத்தாய்நீயித்தனைக்காலந்திரிந்தாய் - - *
போதுமினிப்போவென்றாற்போகாயோ - மாதுனக்கு ௭௮௮
தாய்மாமன்பிள்ளையோதாலிகட்டித்தந்தேனோ - *
நீமாத்திரமகட்குநேசமோ - மாமிகிட்டத் - ௭௮௯

ஐந்தபணஞ்சேதமுண்டோசாண்வயிற்றுப்பிச்சைக்கு *
வந்தவனும்பெண்ணுக்குமாப்பிளையோ-சொந்தமாக் ௭௰.
கிட்டக்கிடக்கக்கிடைப்பாளோதேவடியாள் - - *
இட்டொருவனைச்சேர்வதெத்தனைநாள்-குட்டுணியுன் ௭௰௧
வாணாளைவாங்கிடுவேன்வாயைமூடும்வயிறு - - *
சாணுமுழமோசவுங்கலே-நாணமற்ற - - ௭௰௨
மூடாவிதேதுமுழக்கம்வெளியிலே - - - *
வாடாவொருகாலமதிகேடா-நாடலாம் - - ௭௰௩.
என்றுபுடவையிற்கிளுள்நானவளைத் - - - *
தின்றுவிடத்தக்கசினமானேன்-நன்றியற்ற - ௭௰௪
பாவிநீகேளாய்பழங்கதைசெந்தீயிடைப்பட் - *
டாவிவிடும்பாம்பையெடுத்தாதரிக்கத்-தாவி - ௭௰௫.
நன்கரத்திற்றீண்டியதுநன்மைசெய்யக்கர்மம் - *
விளைந்தகதையென்னளவுமெய்யே-உளம்பதறிப் ௭௰௬.
பேசலாமோநீபுறம்விடலாமோதுடுக்காய் - - *
ஏசலாமோகொடுத்ததில்லையோ-ராசியமேன் - ௭௰௭.
செட்டிகளுக்கெல்லாந்தெரியாதோநான்கொடுத்த - *
கட்டிவராகன்கணக்குண்டோ-தட்டார் - - ௭௰௮.
அறியாரோவூராரறியாரோவுன்னெஞ் - - *
சறியாதோதோஷமலவோ-மறுபடியுன் - - ௭௰௯.
கிட்டவைத்தவென்முடிப்போகேளாய்க்கிழப்பிணமே *
எட்டுதலைமுறைமட்டிங்குண்டே-கெட்டபுத்திக் - ௮௰.
கந்தலையென்றேன்கவட்டினுழையடா - - *
சந்தையின்மாங்கொட்டாய்சரசம்போல்-முந்துன் ௮௰௧.
வளவிற்சிலவுடைமைவைத்துவைத்தேனென்றாய் - *
கள்வாணியப்பயலேகண்ணைக்-கிளறட்டோ - ௮௰௨.
பின்னைசைவேண்டாம்புறப்பட்டுப்போவென்றாள் - *
அந்நேரமோர்வடுகனுயுதமும்-கன்னப் - ௮௰௩.
பரிசையுந்தன்காலிலேபாப்பாசும்போட்டுப் - - *
பெரியபட்டைநாமமுந்தன்பின்னே-ஒருவனுமாய்க் ௮௰௪
கக்கத்தில்வாளிடுக்கிக்கச்சுமூச்சென்றுவந்தான் - *
பக்கத்திலேசவிகைபாராட்டி-வெட்கமறந் - ௮௰௫

தாடாதகூத்தெல்லாமாடியேயம்பலத்தில் - - *
வாடாவென்றென்னைவரட்டுத்தோய்ப்-பாடி - ௮௱௬.
மடியைப்பிடித்தாள்மயிரைப்பிடித்தேன் - - *
தொடையிலடிபட்டதவள்தோர்பை-மடிநழுவித் ௮௱௭
தொங்கியகைவாளமென்று தூக்கிச்சுருட்டியெடுத் - *
தங்கையிணற்கக்கத்தடக்கினேன்-மங்கையென்னைத் ௮௱௮.
தள்ளினளஞ்சாறுதாக்கினேன்பொக்கவாய்க் - - *
குள்ளிபிடித்தாள்குடுமியை-உள்ளூரார் - - ௮௱௯

[சபையேறினமைகூறல்.]

கூடிவிலக்கிவிட்டார்கூகூவென்றம்பலத்தில் - - *
ஓடினாள்நானுமுடன்சென்றேன்-தாடகைபோற் ௮௱௰.
போயப்பொழுதேபுதுமண்டபத்திலந்தக் - - *
கோயிற்றலத்தாரைக்கூட்டமிட்டாள்-வாய்விட் - ௮௱௰௧
டழுதாள்மகளையருகேநிறுத்தித் - - - *
தொழுதாள்மடைமாறிசொல்வாள்-பழியஞ்சிப் ௮௱௰௨

[கிழவி அறிவிப்புக்கூறல்.]

பட்டரோதேவேந்த்ரபட்டரோமீனாக்ஷி - - - *
பட்டரோகாமாக்ஷிபட்டரோ-இஷ்டநர - ௮௱௰௩.
சிங்கையரோநாரணையதீக்ஷிதரோசெவ்வந்தி - - *
லிங்கையரோயெங்கள்சொக்கலிங்கையரோ-சங்கரா ௮௱௰௪.
சாரியாரோயனந்தசாஸ்த்ரியாரோகைவிஸ் - - *
தாரியாரோகோயில்ஸ்தானிகரோ-ஊருக்குள் - ௮௱௰௫.
ந்யாயமிலேயோநடுவிலேயோபார்ப்பாரப் - - *
பேய்பிடித்ததேயெனதுபெண்பிள்ளையைக்கோயிலுக்குள்.
அஞ்சாறுமாதமாயாடிப்பாடித்திரியச் - - *
சஞ்சாரங்கண்டீரோசர்ப்பனையாப்-பஞ்சமாப் ௮௱௰௭.
பாவியிந்தப்பார்ப்பான்பணயங்கொடுத்தொருநாள் - *
மேவியிருந்தான்விடிந்தவுடன்-போவானென் ௮௱௰௮.
றெண்ணினேனென்னமருந்திட்டானோவென்னவகை - *
பண்ணினானோமதநூல்பாடமோ-பெண்ணணங்கை ௮௱௰௯.
வைப்பென்றுபேரிட்டான்வட்டிலிற்கஞ்சிக்குமகள் - *
உப்பென்றுகேளாதுபாயமிட்டான்-கைப்பிடித்துக் ௮௨௰

கொண்டானைப்போலக்குடிலமிட்டான்ஆண்பூண்டு - *
கண்டாலும்பேசாமற்கட்டிட்டான் - ஒண்டொடிக்கு ௮௨௧.
வாடைப்பொடியிட்டான்வாய்ப்பூட்டெனக்குமிட்டான் *
கோடைச்சுழித்துவைத்துக்கொள்ளையிட்டான் - மாடாயோர்.
பட்டிவைக்கிறேன்பலதொம்பைக்கூட்டிற்சம்பாநெல் - *
கட்டிவைக்கிறேன்பொற்கடாரங்கள் - எட்டேழு ௮௨௩.
தாங்கவைக்கிறேனென்றான்சோற்றுக்குத்தாங்கவைத்தான் *
ஏங்கவைத்தானம்பலத்திலேற்றிவைத்தான் - வீங்கலிவன் ௮௨௪
இங்குவந்தநாண்முதலாயேது கொடுத்தான்தனக்குக் - *
குங்குமச்சம்பாவரிசிகொள்ளவென்றும் - பொங்கலுக்குப்.
பாசிப்பயறென்றும்பாலென்றுநெய்யென்றும் - *
தோசைக்குளுந்தென்றுஞ்சோமனென்றும் - பூசுவதுக் ௮௨௬
கானசவ்வாதென்றுமலகுபாக்கென்றும்ரச - - *
பானவர்க்கமென்றும்பகலிரவாய் - ஏனோ - ௮௨௭.
படுக்கைக்குவாழைப்பழமென்றுங்கேட்டான் - - *
கொடுக்குங்கடன்போற்கொடுத்தேன் - மடக்கொடியாள்.
பொட்டொழியக்காதிற்பொகடியொருசோடொழிய - *
ஒட்டொழியத்தோற்றேருடைமையெல்லாம் - பட்டிமகன்.
மோகினிமந்த்ரமுழுதுமறிவான்மதன - - *
ஆகமங்களெல்லாமவதானம் - நாகரிகப் - - ௮௩௰
பொட்டறிவானுந்தண்டுப்பூச்சறிவானும்போகக் - *
கட்டறிவானுமொருநாள்கைவாளத் - தட்டறையிற் ௮௩௧.
சோதித்தேன்சின்னமயிர்த்தோலுநரிக்கொம்பும்வி - *
பூதிக்கிழியும்பொடிப்புமதில் - ஏதுக் - - ௮௩௨.
குருட்டிவைத்தானேசிலதுஉண்டையுதான்கண்டேன் - *
திருட்டுப்புரட்டனென்றுதேர்ந்தேன் - அரைக்காசுத் ௮௩௩.
தொண்டனிவனம்பலத்திற்சோதிப்பானென்றிங்கே - *
கொண்டுவருவானேகொண்டுவரான் - வண்டனிவன் ௮௩௪.
மானேர்விழியணங்குமாதவிடாயானக்கால் - - *
தானேவிடவருவான்தண்ணீரை - மானுஷீமோ - ௮௩௫
அல்லும்பகலுமடைத்தகதவைத்திறவான் - - *
மெல்லியலைச்சற்றும்வெளியில்விடான் - சொல்லுவதென் ௮௩௬

பத்துவிசையாம்பகலுக்கும்ராத்திரிக்கும் - - *
பத்துவிசைக்குமென்றன்பாவைபோல்-உத்தரிக்க ௮௬௭.

ஆர்க்குமுடியுமிவளாலுமுன்பிறப்பில் - - *
ஊர்க்குருவியோபெண்ணுடம்பிலே-தீர்க்கவொண்ணு ௮௬௮

நோவொதுங்கவிட்டானூறுவயதுப்பயிர்க்குப் - *
பூவொதுங்கவிட்டான்பொறுபொறென்று-பாவிமகன் ௮௬௯

சொன்னங்கொடுப்பனென்றுசொன்னதுவுண்டல்லாமல் *
என்னகொடுத்தானிதுவரைக்கும்-என்மகட்கு - ௮௭௰.

மோகங்கொடுத்தான்முளையாப்புக்கொடுத்தான் - *
மேகங்கொடுத்தான்மெலியவிட்டான்-ஆகம் - ௮௭௧.

சிரங்காணுள்தம்பியிட்ட தீமருந்தால்மாது - - *
குரங்காணுள்குத்திருப்பல்கொண்டாள்-மருந்து - ௮௭௨

கொடுப்பவரார்புண்ணுக்குக்கூசாமற்கிட்டப் - - *
படுப்பவராரொவ்மகளைப்பாவி-கெடுத்தானே - ௮௭௩

தேட்டுவந்துசேருஞ்சிறுவயதிற்போக்கறுவான் - *
வீட்டிற்புகுந்தாம்விடுதுபோல் நாட்டமாய்க் - ௮௭௪.

கூடவந்தங்கிந்தக்குடுமித்தலையைக்கண் - - *
டாடவர்களெல்லாமகன்றுவிட்டார்-தேடாமல் - ௮௭௫.

நித்திரைக்குப்பொன்னூறுநித்தங்கொடுத்துவந்த - *
முத்திரைப்பண்டாரமோமோடிவைத்து-மெத்தக் ௮௭௬.

கறுப்பானுன்மாலைகட்டிக்கன்னியப்பன்முற்றும் - *
வெறுப்பானுன்மெய்காவல்வேலன்-சிறுக்கிமேல் - ௮௭௭.

ஆசைவைத்தவாத்தியாரையர்முறைதப்பிதமாப் - *
பாஷைவைத்துப்போனார்பசையானார்-காசுபணம் ௮௭௮.

மாரியெனச்சொரிந்தமாரியப்பன்சண்டையிட்டு - *
வீரிவளவிற்போனான்மீள்வானே-தேரோறப் - ௮௭௯.

பொன்னுடைமைபூட்டிவிட்டபொன்னப்பனந்திசந்தி - *
சன்னையிட்டுப்பார்த்தான்சலித்துவிட்டான்-பின்னை ௮௮௰

வரத்துமில்லைத்தானும்வழங்கானேர்சேலை - - *
தரச்சொன்னாளின்றைக்குச்சண்டைக்-கொருப்பட்டான்.

வைதானெனையுமயிர்பிடித்தான்செய்யாது - - *
செய்தான்மகளைச்செவியிலே-கையால் - - ௮௮௨.

அடித்தான்விலக்குமவனைமுழங்கையால் - - *
இடித்தான்கரத்தினுலெல்லீணே - இடுப்பொடியப் - அருரு.

போட்டானங்கேமூர்ச்சைபோனேனெழுந்திருந்தேன் *
கேட்டார்சிரிக்கவல்லோகீர்த்திவைத்தான் - ஞட்டிசெய்த.

தேதென்றுநீர்கேட்டாலென்னசொல்வாள்தாய்க்கிழவி *
சூதென்பாள்வாரிச்சொரிந்தபொருட் - சேதம் - அருகு

கணக்குண்டோவென்பாள்கள்ளிமெச்சவிந்தத் - - *
துணிக்குண்ணியோகொடுப்பாள்சொர்ணம் - பணக்கவளம்.

மாந்தரிட்டுக்கட்டிவளர்த்தகடாக்கையிலே - - *
பாய்ந்தகலந்மெய்யாய்ப்பலித்ததே - ஈந்ததில்லை அருஎ.

தாயுங்களுமொருதாமரையினீராஞேம் - - *
பேயுமிரங்குமேபெண்ணென்றல் - தூய்வரோ - அருஅ

கண்டநடுப்பேசிக்கணக்குப்பார்த்துப்பொருளைத் - *
தெண்டித்துவாங்கியிந்தச்சேமனைநீர் - கண்டிப்பா அருகூ.

மெட்டுக்கடக்கவெருட்டிடுமென்றுலென்ற - - *
சட்டித்தலைப்பேயைத்தான்மர்த்திப் - பட்டன்மார் அசூ0

நில்லென்றருள்வாழ்க்கைநீர்ப்பாக்கியாநீயும் - - *
சொல்லென்றூர்சொல்லத்தொடங்கினேன் - கல்லும் அசுக

[தன்னறிவிப்புக்கூறல்.]

கரையுமேமாய்மாதர்கள்ளிசொன்னவார்த்தைக் - *
குரையுமெதிர்வழக்குமுண்டோ - ஒருநாள் - அசுஉ

நடந்தகதைகேளீர்நடுக்காட்டினீலி - - - *
தொடர்ந்தாளோர்செட்டிதனைச்சூதாய் - நடந்தவன்கைப்.

பத்திரத்தாற்றப்பிப்பழையனூரம்பலத்தில் - - *
மொய்த்திருந்தவேளாளர்முன்சென்றாள் - சத்துருப்போல்.

ஆலங்காட்டுப்பேயதோவருகுதென்மனையாள் - *
கோலங்காட்டிப்பகட்டிக்கொண்டென்றன் - நீலியெனும்.

கள்ளிமுலைப்பாலுங்கண்ணீருங்காள்கறுவக் - - *
கள்ளியொன்றைப்பிள்ளையாக்கையேந்தி - மெள்ளவந்து.

நாட்டிலேகண்டதுண்டோநல்லோரேயென்னைநடுக் - *
காட்டிலேவிட்டார்கணவனார் - மீட்டுமவர் = அசுஎ.

கிட்டவந்தார்நான்பயந்துகெஞ்சிவர்ந்தேன்வாளுருவி - *
வெட்டவந்தார்முன்னாள்விதிப்படியோ-முட்டமுட்டப்.
பேயென்றென்னையிந்தப்பிள்ளைகள்வீக்கொம்பென்றார் *
தாயென்றாரில்லைதமரில்லை-தாயவரோ - - ௮௬௯.
பேர்விட்டான்முலைக்கீழ்ப்பிள்ளையைவிட்டாலதுதான் *
ஆர்கிட்டப்போமென்றறியலாம்-பாருமென - ௮௭௰.
விட்டாள்சபையிலதுமெள்ளத்தவழ்ந்துமடி - - *
தொட்டேறச்செட்டிதுணுக்கென்றான்-ஒட்டாரம் ௮௭௧.
பண்ணுகிறான்செட்டியென்றார்பார்த்தவரொல்லாமவளென் *
கண்ணேநீயென்றான்கானடுங்கிப்-பெண்ணலது ௮௭௨.
சத்துருப்பேயாகிச்சதிசெய்தால்நாங்களுனக் - *
கித்தனைபேரும்பழிகாணென்றுரைத்துப்-பத்திரத்தை. ௮௭௩.
வாங்கிவணிகனையுமார்க்கமிட்டநீலியையும் - - *
பாங்கிலொருவீட்டிற்படுக்கவைத்துத்-தூங்குமெனப் ௮௭௪
பூட்டிக்கதவடைத்துப்போயினர்பேய்மதியோர் - *
வாட்டமுற்றநீலிபழிவாச்சுதென்றே-ஊட்டி - ௮௭௫
பிடித்தாள்வணிகன்பிடரிதனைக்கையால் - - *
ஒடித்தாள்குடித்தாளுதிரம்-குடித்தாள்பின் - ௮௭௬.
நீண்டாள்பிளந்தெறிந்தாள்நெஞ்சிற்குடர்மாலை - *
பூண்டாளெழுந்தாள்பொருள்வணிகன்-மாண்டதற்பின்.
கண்டார்வழக்கையெந்தக்கற்பனையாற்சற்பனைகள் - *
விண்டாலும்பெண்வார்த்தைமெய்யாங்காண்-அண்டினர்க்கூ
றுக்கிநடுக்காட்டிலடித்துப்பறித்தூரிற் - - *
கூக்குரலுமிட்டாற்பின்கூறுவதென்-வாய்க்கவினம் ௮௭௯.
பூண்டபரியெடுத்துப்போட்டதுமல்லாதுகுழி - *
தோண்டுதென்றுன்னின்மேற்சொல்வானேன்-ஆண்டமறை.
அந்தணரோதாவிவண்மேலாசைகொண்டேன்மோசமதாய் *
இந்தவிதிவருமென்றெண்ணுமல்-முந்தமுந்தக் - ௮௮௧.
கூனிமருந்தையிட்டுக்கூறுகொண்டாளன்றுமுதல் - *
மேனியொடுங்கினேன்மெய்ம்மறந்தேன்நானிவட்கு ௮௮௨.
முன்னேட்கடனைமுதலிடுவார்போற்கொடுத்த - *
பொன்னேபொற்பூந்துகிலோபூஷணமோ-சொன்னசெல.

வத்தனைக்கும்வீணையழித்ததெல்லாம்யான்கணக்கிட் - *
டெத்தனையென்றுங்கட்டியம்புவேன் - நித்தநித்தம் ௮௪௪.
வல்லார்தனத்திசொத்தவைப்பென்றுபேரினையும் - *
அல்லாமற்போக்குவரத்தாயிரம்பேர் - நல்லவள்போல் ௮௪௫
உள்ளதெல்லாமெள்ளவுபாயமாய்வாங்கியெனைத் - *
தள்ளிவிடக்கள்ளிதளமெடுத்தாள் - உள்ளுடையப் ௮௪௬.
பேசினள்சும்மாப்புறப்பட்டுப்போடாவென் - *
றேசினள்நீகொடுத்ததென்னென்றாள் - கூசாமல் - ௮௪௭
முந்திமடிபிடித்தாள்முந்தானையைக்கிழித்தாள் - *
சந்தியிலேபூணூல்தனையறுத்தாள் - இந்தநனைத் - ௮௪௮
தாட்டானைவந்தென்தலையிலொருகுட்டு - - *
போட்டாளொன்குட்டெல்லாம்போச்சையா - மோட்டு ௮௪௯
வடுகனையென்மேல்விடுத்தாள்மற்றொருவனுனல் - *
விடுவானோபுண்ணியவான்விட்டான் - இடுதூறாய் - ௮௫௦.
அந்தக்கிழவியலக்கழிக்கப்பார்த்திருந்த - - *
இந்தக்குமரியேனென்றாளோ - சந்த்ர - - ௮௫௧.
கலைவாணுதலணங்கேகாதலென்மேலுண்டோ - - *
இலையோவுனக்கென்றேனெட்டித் - தலைமேற் - ௮௫௨.
சளக்கென்றடித்தாள்சதிகாரிவீட்டு - - - *
விளக்கிலடித்தாள்பின்வெள்ளி - முளைக்குமுன்னே ௮௫௩.
முந்திபோட்டுன்மேலேமுக்காலுமாசையென்று - *
சந்திவீரப்பன்முன்னேதாண்டினள் - வந்தொருவன் ௮௫௪.
முத்தங்கொளுவாய்க்குமுன்னொருவன்தான்கொடுத்த - *
அத்தம்பலங்கொடுப்பார்க்காணையுண்டோ - வித்தகரோ ௮௫௫
மேனியிட்டுநல்லமெழுகுபிள்ளையார்போலே - *
யானிருந்ததீர்க்கமறியீரோ - கூனியெனக் - ௮௫௬.
கிட்டமருந்தாலுமிவள்கொடுத்தபுண்ணாலும் - *
ஒட்டியுலர்ந்தவுடலானேன் - மட்டைக் - - ௮௫௭.
கிறுத்ததெல்லாம்போகட்டுமென்பொருளீதென்று - *
மதித்துமொருபொன்முடிப்புவைத்தேன் - நிறத்தமுழு.
மாணிக்கமொன்றுமணிமுத்தொருசிறங்கை [வைத். ௮௫௮
பேணிவைக்கச்சொல்லிவைத்தேன்பெண்ணிடத்தில் - ஏணியை

தேறவிட்டுவாங்கியெண்ணெயிக்கோலங்கண்டசுழன் *
மாறிடவாங்கியழுங்குவீர் - வேறெனக்குத் ௬௱

[பின்னுந்தாய்க்கிழவிஅறிவிப்புக்கூறல்]

தஞ்சமில்லைநீங்களேதஞ்சமென்றேனந்நேரம் *
தொஞ்சமுலைக்காரிதுடிதுடிப்பாய் - வஞ்சத் ௬௱௧
திருடனிவன்கூத்திச்செல்வுக்கும்போக்கி *
ஒருமுடிப்புவைத்ததுவுமுண்டோ - மருதங் ௬௱௨
குடியிருக்குதேயழகர்கோயில்பதினெட்டாம் *
படியிருக்குதேமுதலைப்பள்ளம் - நடுந்யாயம் ௬௱௩
சொல்லுதேசிங்கம்பிடாரிதுடியாமல் *
கொல்லுதேதீர்த்துக்கொடுக்கிறோம் - அல்லவென்றால் ௬௱௪
எல்லைக்கிடத்தியெனதுமகள்தாண்டமகள் *
தல்லைக்கிடத்திநான்தாண்டுகிறேன் - சொன்னதென்ன ௬௱௫
தெள்ளிமையோமுற்பிறப்பிற்சீர்கேடனென்மகட்குப் *
பிள்ளைமையோவென்றாள்பெரியோர்முன் - கள்ளிசொல்லைக் ௬௱௬

[சபையார்விசாரணைகூறல்.]

கேட்டுநகைப்புரிந்தார்கிட்டவழைத்தென்னையவர் *
கூட்டத்துக்குள்ளிருத்திக்கூறுவார் - வாட்டமுற்ற ௬௱௭
மாதவனேவேசிமருந்திட்டாளென்றீரச் *
சேதியுமக்கெங்கேதெரிந்ததென்றார் - காதல்தந்த ௬௱௮

[மருந்திட்டதறிந்தமைகூறல்.]

முத்தனையாள்நேற்றிரவுமுலைக்குள்வைத்துநிறை *
குத்தியரக்குக்குடித்துக்கூட்டமிட்டிவ் - வத்தைமுதல் ௬௱௯
வெள்ளாட்டிகளுங்குடித்துவெறிபிடித்துத் *
துள்ளாட்டமாடமங்கைதூஷணித்துத் - தள்ளித் ௬௱௰
தலைக்கடையில்விட்டாளென்றன்னையொருத்தன் *
விலக்கெருதுபோற்புகுந்தான்வீட்டில் - மலக்கமாய்த் ௬௱௰௧
திண்ணைத்தலையிற்படுத்திருந்தேன்குண்டுணிவாய்க் *
கண்ணியங்கேவந்தாள்கலைநெகிழ்த்து - உண்ணும் ௬௱௰௨
அரக்குவெறியாலவளென்மேல்வீழ்ந்து *
குரக்குவெறிபோற்குறியிற்குய்யம் - பொருத்தியென்னைப் ௬௱௰௩

பண்ணாதகோலமெல்லாம்பண்ணினுளார்க்குமொருப் - *
பெண்ணாசையானாற்பிடிக்குமோ - அண்ணர்களைச் கூ௱௰௪.
சம்போகஞ்செய்வதுபோற்றன்னைலயாவதெல்லாம் - *
அம்பாகுங்கண்ணியார்த்தாகாமல் - வெம்பியே - கூ௱௰௫.
காட்டுமருந்துங்கடைமருந்துமூன்மருந்துங் - *
கூட்டியிட்டாலாசையொருகோதைமேல் - நாட்டம்வர.
வொட்டுமோவென்றுருடந்தையாகத்திரிந்த - - *
வட்டமுலையாள்சொல்வகைவகையாற் - சிட்டரோ கூ௱௰௭.
இந்தவிதம்நானறிந்தேனென்றுரைத்தேன்கேட்டுநல்ல *
வித்தையெனச்சிரித்தார்மேலோர்கள் - சிந்தைநொந்து.

[சபையார்தன்னைத்தேற்றினமைகூறல்.]

பூசுரரோவேதபுனிதரோயம்பலத்தில் - - - *
தாசியுடனேறத்தகாதுகாண் - வேசியொரு - கூ௱௰௯,
செய்யமறைவேதியனைச்சென்னியிற்கல்லிட்டகதை - *
ஐயரோ நீர்தாம்றியீரோ - கையில் - - - கூ௱௨௰
திரவியத்தைவாங்கியுமைச்சீவனுடன்விட்ட - - *
மரியாதைக்குண்டோவழக்குப் - பெரியோரோ - கூ௨௰௧
வேதியராயுள்ளவர்கள்வேசியரைக்கண்டக்காற் - *
காதவழிவிலங்கல்காரியங்காண் - ஓதுமறை - கூ௨௰௨
மந்திரநூல்வாயான்மதுவாய்ரசங்கொள்ள - - *
எந்தவகைதுணிவாயெண்ணினீர் - சிந்தைமயல் கூ௨௰௩.
தீர்த்தவாசிக்குத்திரவியமெல்லாங்கொடுத்துத் - *
தீர்த்தவாசிக்கடனைத்தீர்த்துவிட்டீர் - கீர்த்தியா கூ௨௰௪.
நாமறியாக்கூத்துநடித்துவிட்டீருமளமோ - *
மாமறையோர்க்கெல்லாம்வசையாச்சே - சேமநிதி கூ௨௰௫
தன்னைப்பறித்தாள்தரச்சொல்லுமென்றீரப் - - *
பொன்னையினிக்கேட்கப்போகுமோ - பொன்னைப்போற்.
கூட்டியசெந்தேனெடுத்துக்கொண்டபேர்தம்மையவர் *
ஓட்டியவீதெண்டிப்பதுண்டோகாண் - சூட்டரவின். கூ௨௰௭
வாய்க்குளகப்பட்டமண்டூகமும்யானை - - *
வாய்க்குளகப்பட்டவான்கரும்பும் - தீக்குள்ளே கூ௨௰௮.

விட்டநறுநெய்யும்வெயின்முகத்திலேவெடிக்கப் *
பட்டகமரில்விட்டபாற்குழம்பும் - கட்டுபுகழ் ௩௨௯
பாங்கினாற்றேடாப்பாமனுத்தர்கைப்பொருளும் *
வாங்கினாலிப்பொருளும்வாங்கலாம் - நாங்கள்சொன்ன. ௩௩௰
பத்திவழிதிறற்பொருளறிந்தோநீர்கற்ற *
வித்தையிலேசெம்பொன்விளையுமே - எத்தும் ௩௩௧
பரத்தையருக்கிந்ததிலும்பத்தத்தனையாய் *
வரத்தக்கயோகம்வருங்காண் - கருத்திலே ௩௩௨
எண்ணியிடையாதிருக்குமூர்க்கேகுமென்று *
புண்ணியர்தாந்தம்மனையிற்போயினார் - பெண்ணணங்கை.

[தாய்கலங்கித்தெளிந்தமைகூறல்]

பின்னடத்திச்செல்லினவள்பின்னழைப்பாரோரோ *
முன்னடத்திச்சென்றாள்முழுப்பாவி - தன்னீர்க்கட் ௩௩௪
டாகுங்குளத்திலனுபவித்துவற்றியபின் *
ஏகும்பறவைகள்போலேகினாள் - மோகமுற்ற ௩௩௫
என்னைக்கிழவியிடர்செய்தெனைப்பிரியாக் *
கன்னிதனைப்பிரிவுகண்டாளே - இந்நாட்டில் ௩௩௬
மாட்டுமதித்தாய்க்கிழவிமாமிதலையிற்கல்லைப் *
போட்டுப்புறப்பட்டுப்போவோமோ - நாட்டமுற்ற ௩௩௭
ஊரெங்கேதோழரெங்கேயுற்றாரெங்கேமனைவி *
யாரெங்கேயஷ்டாவதானியெனும் - பேரெங்கே ௩௩௮
நானாவிதமுமெண்ணிநட்டாற்றுக்கோரையைப்போல் *
ஆனேனெனக்கலக்கமாகினேன் - யானே ௩௩௯

[ஆலயஞ்சென்றுதெரிசித்தமைகூறல்.]

எனைத்தேற்றிக்கொண்டுபோயெங்கள்சொக்கலிங்கந் *
தனைப்போற்றியென்கவலைசாற்றி - அனுக்கிரகம் ௩௪௰
பெற்றிரண்டாஞ்செம்பொற்பிரகாரம்யான்வலமாச் *
சுற்றிவயிரவசுவாமியையும் - முற்றும் ௩௪௧
வணங்கியம்பொற்கம்பந்தனக்குவடபால் *
இணங்குந்திருவாசற்கிப்பால் - மணங்கமழ்பூ ௩௪௨
மாலைநிரைத்தமணிவாசன்முன்முகப்பிற் *
சேலைநிரைத்ததிருவிளக்கும் - பாலரவி ௩௪௩

காந்திதரநிரைத்துக்கட்டளைக்குக்கட்டளையாய் - *
வாய்ந்ததெல்லாஞ்சொர்ணமயமாகித்-தேய்ந்தமுனை கூசச.
நெட்டிலைவேற்சங்கநிதிக்கரசனுபரணப் - - *
பெட்டிதிறந்தப்ரகாசம்போற்-சட்டப் - - கூசரு
புழுகுமணக்கப்பொலிந்தவறைகண்டு - - *
தொழுதேனதிசயமுந்தோன்றப்-பழுதில் - கூசசா.
மறையோன்மணியம்வரதையனென்போனவ் - *
வறைவாசலிலிருந்தானையா-நெறியுடையாய் - கூசஎ.
[நாகமகூளேந்திரன்கட்டளைகண்டமைகூறல்.]
ஆருபயமீதென்றெனுடலபயன்மூலைத் - - *
தாருலவுமேருத்தடம்புயமால்-பாராளும் - - கூசஅ
யோகமகராசனென்பதூர்வாழ்பெரிய - - *
நாகமகூளேந்த்ரநரபாலன்-தோகைமயில் - கூசகூ
மீனாக்ஷியம்மைக்குமிக்கசொக்கலிங்கருக்குந் - - *
தானாட்சியானவுபசாரமா-மேன்மையபி - - கூருய
ஷேகமதுமாலைசிறப்புமுதுதீபமுத - - - *
லாகநடப்பிக்குமறையென்றான்-மோகநமக் - கூருக.
[இழந்தபொருளுக்கிரங்கினமைகூறல்.]
கிட்டணையுங்கன்னிக்கிறைத்ததெல்லாமிப்படியோர் - *
கட்டளையாச்செய்துபலன்கண்டோமோ-சிட்டர்தொழும்.
அங்கயற்கணம்மைக்கழகுதிருவாசியொன்று - - *
தங்கத்திலேசமைத்தோமோ-சங்கரர்சொக் - கூருங
கையர்மகிழ்ந்தேறவுபிஷேகபண்டாரம் - - *
செய்ததிருத்தேர்போலச்செய்தோமோ-வைபோகம் கூருச
பெற்றபுதுமண்டபத்திற்பின்புறமுமுன்புறமும் - *
பொற்றகடுகொண்டழுத்திப்போட்டோமோ-மற்றுமெங்கள்
மாலழகருக்குவயிரத்தான்மின்னெறித்தாற் - - *
போலழகாமங்கிபண்ணிப்பூட்டினமோ-சாலையறம் கூருசா.
செய்தோமோகோதானஞ்செய்தோமோபூதானம் - *
செய்தோமோசத்திரங்கள்செய்தோமோ-துய்யநிதி கூருஎ.
ஆரிடத்தில்வாங்கியரும்பலனைத்தேடுவோம் - - *
பேர்படைத்தபெஞ்சைப்ரதாபனென்ப-தூர்படைத்த கூருஅ

[அப்பிரபுவிடத்துக்குச்செல்லத்துணிந்தமைகூறல்.]

ஐயன்பெரியநாகையனிடஞ்செல்வோமோ - - *
செய்புமறைவேதியரோசெப்புமென்றேன் - எய்துதிருப் ௩௫௯
பாற்கடலுக்கேகின்வர்பால்குடியாரோவிதற்கு - *
மேற்புத்தியுங்கேட்கவேணுமோ - சூற்கொண்டு - ௩௬௰.
பெய்யுமழைக்குணையாதபேருமவன் - - *
கையிலேற்காவருங்காணேனுன் - ஐயமின்றிப் - ௩௬௧.
போமெனவெண்ணீறுதந்துபூசிவிட்டார்சந்தனத்தை - *
யாமெனச்சொக்கேசரடிபணிந்து - மாமேவு - ௩௬௨.
கூடலழகர்மதனகோபாலர்பூந்துளவ - - - *
வேடலருந்தார்வீரராகவமால் - மாடேறும் - - ௩௬௩.
நல்லாண்டவர்யார்க்குமிம்மையிலேநன்மைதரு - - *
மல்லாண்டவர்பாதம்வாழ்த்தியே - செல்வ - ௩௬௪.
மடந்தையங்கயற்கண்வாசலறச்சாலை - - - *
கடந்தும்றுவீதிகடந்து - நடந்துவரப் - - ௩௬௫.

[மதுரையினின்றுஞ்சென்றமைகூறல்.]

பின்னிழுக்குமோர்காலைப்பெண்ணாசைமாமினம் - *
முன்னிழுக்குமோர்காலைமூன்றுதரம் - பின்னே - ௩௬௬.
திரும்புவதுமீள்வதுவுமாய்ச்சிமோட்டியாசைக் - - *
கரும்பைநினைத்தேன்கருத்தில் - விரும்புமவள் - ௩௬௭
குன்றிருக்குமென்முலைமேற்கூடிக்கலந்தசுகம் - *
இன்றொருத்தன்பங்காயிருக்குமோ - மன்றலத்தார்ச் ௩௬௮
சுற்றுடநான்படுத்ததூங்குமஞ்சமீதிலொரு - - *
பற்றுப்பயனும்படுப்பானோ - மற்றுமந்தச் - ௩௬௯.
சந்தியிலேமாமியிட்டசண்டையிலேவந்தவொரு - *
தொந்திவடுகன்சுகிப்பானோ - முந்திவிளை - ௩௭௰.
யாடியனுராகம்பாடியுறவாடிநான் - - - *
கூடியதெல்லாநினைத்துக்கொள்வாளோ - மேடையின்மேற்.
கிண்ணமுலைமேற்பதித்தகிள்ளைப்பார்த்தென்னையுஞ்சற் *
றெண்ணிநெடுமூச்செறிவாளோ - எண்ணிற் - ௩௭௨
படாதபாடித்தனையும்பட்டேனென்பாவம் - - *
இடாதோபிரமனூர்க்கென்றே - தடாமல் - ௩௭௩

விடக்குமுகக்கோட்டைவாசல்நடுக்கட்டு - - *
முடக்கில்வரும்போதெனக்குமுன்னே-அடக்கமுள்ள கஎச.

[ஞானியாரைமறுபடியுங்கண்டமைகூறல்.]

மானுடபரஞானியையன்மருளைக்கன் - - - *
றேனேவந்தானென்னென்றிராக்-நானவனைக் - - கஎரு.
கானுமவ்விற்கள்வாண்டவன்போலென் - - - *
சானுடம்புங்குன்றியொருசாணுகேனன்-நாணமாய் கஎசா.
மாமிதனைக்கண்டமருமகள்போலானேனைச் - - *
சாமியெனையன்பாய்த்தழுவினான்-நாமறிய - கஎஎ
ஆனைபோலேயிருந்தீரையோயும்முடம்பு - - *
பூனைபோலேயொடுங்கிப்போவானேன்-ஆனவிது கஎஅ
என்னவகையென்றான்மற்றேதுவகைநீர்முதலே - *
சொன்னவகைகேளாததோஷவகை முன்னுமது கஎகூ
கையைவிட்டுவேசிமகள்கால்பிடிக்கச்சென்றேன் - *
மையையிட்டகண்ணிக்குமாலானேன்-பையவுன்னை கஅ௰.
கூட்டியிட்டாள்கைப்பொருளைக்கொள்ளையிட்டாள்கைக்குர [ங்கா
ஆட்டியிட்டாளிக்கோல்மாக்கியிட்டாள்-கேட்டார் கஅக.

[ஞானியார்தேற்றினமைகூறல்.]

நகைப்பாரென்றேனிதற்குநாணமேன்யார்க்கும் - *
வகைதப்பாமோசம்வராதோ-பகுத்தறிவாம் - கஅஉ.
இந்திரன்மெய்யோனிக்கண்ணானதுவும் - *
அந்தணனார்சென்னியிலொன்றற்றதுவும்-சந்தோப கஅங.
சுந்தர்மடிந்ததுவுஞ்சுக்கிரீவனால்வாலி - - - *
முந்தமடிந்ததுவுமுன்னொருநாள்-கந்தன் - கஅச.
மரமானதுமிலங்கைவாழ்வேந்தன்சிந்து - - *
சிரமானதும்வச்சிரதேகத்-திரம்படைத்த - கஅரு.
கீசகனார்மாண்டதுவுங்கேட்டிலையோபெண் - *
ணாசையாலென்பதறியீரோ-பூசுரரோ - - கஅசா.
கைப்பொருள்போச்சென்றுகவலையேன்கல்வியொன்றால் *
மெய்ப்பொருளாம்பாவலர்க்குவேள்ாண்மை-இப்புவியில்.

(மிள)

மன்னனுமாசறக்கற்றோனுஞ்சீர்தூக்கின் *
மன்னனிற்கற்றோன் சிறப்புடையன் - மன்னனுக்குத் ௯௮௮
தன்றேசமல்லாற்சிறப்பில்லைகற்றோற்குச் *
சென்றவிடமெல்லாஞ்சிறப்பென்று - நன்றிபெற ௯௮௯
அவ்வைசொன்னநீதியறியீரோநீரினிமேல் *
இவ்விடம்விட்டுங்களூர்க்கேகுமென்று - தெய்வ ௯௯௰
மறைவல்லோனென்னைவழிவிடுத்துப்பார்த்துத் *
தறுகிநின்றானென்மேற்றயவால் - நெறியுடனே ௯௯௧

[ஒன்பதூர்நோக்கிச்சென்றமைகூறல்.]

ஐம்பதூர்க்கேகியலைந்துபலனேதென்றே *
ஒன்பதூர்க்கேகவொருமித்தேன் - முன்புகருங் ௯௯௨

[நற்சகுனங்கண்டமைகூறல்.]

காகமிடத்திருந்துகைக்குவலப்புறத்தில் *
ஏகக்கருடனிடமாக - யோகபலம் ௯௯௩

[ஏடகங்கண்டமைகூறல்.]

இன்றுவந்ததாகுநமக்கென்றுவந்தேனேடகத்திற் *
சென்றுவந்தேயந்தச்சிவனை - அன்றுதெரி ௯௯௪
சித்தேனென்பூர்வசெனனதோஷங்களெலாம் *
இந்தேசங்கண்டதெனவறியேன் - அத்தலத்தில் ௯௯௫
வேம்புகரும்பாமாம்வெண்மணலோநீறுமாம் *
தாம்புவிடுநீரமிர்தந்தானுமாம் - தேம்பும் ௯௯௬
வறியேன்மருந்தின்மயக்கமுநோயுந்தீர்த் *
தறிவாளனுக்கிவிட்டதவ்வூர் - நெறியுடனே ௯௯௭
அற்றைநாள்தங்கியருணோதயத்தெழுந்து *
மற்றைநாண்மேற்குவழிகொண்டேன் - வெற்றிபுரி ௯௯௮
கோடுகொண்டமால்யானைக்கூளேந்த்ரனென்பதூர் *
நாடுகண்டேனென்கவலைநான்காணேன் - ஆடகவான் ௯௯௯

[பின்புநாட்டுவளங்கண்டமைகூறல்.]

எட்டியபூஞ்சோலையெழிற்கமுகும்வாழைகளும் *
கட்டியபூங்காவணமாக்காண்பிக்க - விட்ட ௲
வருக்கைபலாக்கனியைமந்தியிருகைக்கொண் *
டிருக்குமதுமத்தளக்கொட்டென்ன - உருக்குமிசை ௲௧

வண்டுதித்திகூடவரிக்குயில்கள்பண்பாடக் - - *
கண்டுகிளிகள்கவிபாடத்-தண்டாத - - - உ.
மன்றலந்தாரல்லிமலர்வாடைக்காற்றுலடிபட் - *
டொன்றொடொன்றுதாளம்போலொத்திசைப்ப-நின்றுலகில்.
நீலவன்னத்தோகைநெடுஞ்சிறகைமேல்விரித்துக் - *
கோலவனிதையர்போற்கூத்தாடச்-சோலைக்குள் - ௬.
ஆங்குநதிபாயுமலரோடைவாளைவாள் - - - *
வாங்கியவீச்சுவளங்காட்டப்-பூங்காவில் - - ரு.
வந்துநுழைந்துசெல்லும்வாலரவிகூத்துக்குப் - - *
பந்தம்பிடிக்கும்படிசிறப்ப-முந்த - - - ௬.
முகைத்திருக்குமுல்லைமலர்மொய்த்திருந்துபார்ப்போர் *
நகைத்திருக்கும்பாவனையாய்நண்ண-மிகுத்தபொறி - எ.
வண்டாடுஞ்செங்காந்தள்வாடையாலேயசைந்து - *
கொண்டாடுவோர்கைக்குணங்காட்டக்-கண்டெதிர்புன் அ.
னாகமலருநறுங்கொன்றைப்பூவிதழுந் - - - *
தியாகமெனப்பொன்னுமுத்துஞ்சிந்திநிற்பத் - தோகைவிரித்
தாடுகின்றமஞ்ஞையெதிரன்னம்பறந்துவந்து - *
போடுகின்றவெண்டூசுபோற்படிய-நீடுவயற் - - ௯.
சாலிக்கதிர்க்குலையுந்தாமரையுமந்தநறுஞ் - - *
சோலைக்குண்மன்னர்குழாஞ்சூழ்ந்ததொக்குஞ் - சோலைவளம்.
எதென்றுசொல்வேனிருதோளும்பூரித்தேன் - - *
வேதன்றொழுங்கோயின்மேட்டிலே-சீதையுடன் - ௰உ
[திம்மராயனைக்கண்டுதெரிசித்ததைக்கூறல்.]
மாதவனைக்கண்டேனென்வல்வினையெல்லாமுடனே - *
ஆதவனைக்கண்டபனியாக்கினேன்-பாதம் - - ௰௩
தொழுதுதிம்மராயா துதித்துனைப்பாடாமல் - - *
பழுதிலேவேசையனைப்பன்னி-முழுவதுமுன் - - ௰௪
மீனவடிவையந்தமின்னார்கண்ணென்றுநீ - - *
யானசிங்கருபமிடையாமென்றும்-மேன்மையுடன் ௰ரு.
மைக்கிசைந்தரூபத்தைமங்கையார்கூந்தலென்றும் - *
கைக்கிசைந்தசங்கைக்கழுத்தென்றும்-திக்கனைத்தும் - ௰௬

நந்திப்புவன்மேலார்ந்தந்தவனைத்தந்தமலை - - *
ருந்திதிருமுகத்துக்கொப்பென்றும் - சந்ததமும் - ௰௭.
வேயடுத்தநின்னிசையைப்பயின்ஞர்வசனமென்றும் - - *
நீபடுக்கும்பாயைநிதம்பமென்றும் - வாய்பிதற்றிப் ௰௮.
பாடினேனிந்தப்பலன்கண்டேன்சிந்தைமலர் - - *
சூடினேன்பாதந்தொழுதெழுந்தேன் - ஆடி - ௰௯.

[பதியின்சிறப்புக்கண்டமைகூறல்.]

அளகாபுரிக்குமமராவதிக்கும் - - - - *
வளமாநவபுரிக்குவந்தேன் - பளபளெனும் - ௨௰.
செம்பொனெடுமதிலுந்தேரோடும்வீதிகளும் - *
கும்பமுடிநிரைத்தகோபுரமும் - அம்பரத்தில் - ௨௧.
ஆற்றுநீரள்ளியருக்கனுடல்குளிரத் - - - *
தூற்றியபொன்மாடத்துகிற்கொடியும் - நீற்றொளிசேர் ௨௨.
தன்னிறத்தைப்பொன்னிலத்துத்தந்திங்கீந்தந்நிலத்துப் *
பொன்னிறத்தைப்பெற்றபுரிசைகளும் - இன்னவழ - ௨௩.
கத்தனையுங்கண்டுமகிழ்ந்தையனைகோயிலனும் - *
கர்த்தனையுங்கண்டுகமலத்தாள் - பத்தியுடன் - - ௨௪.

[அரண்மனைகண்டுசென்றமைகூறல்.]

சேவித்தேன்கோயிலுக்குத்தென்புறத்திற்கற்பகப்பூ - *
நீவித்தேனூற்றுநெடுமதிலும் - மேவுமுகம் - ௨௫.
இட்டமணிப்பொற்குடங்களெட்டுவகைச்செந்திருவின் *
வட்டமுலைபோலிலங்குமாளிகையும் - தொட்டுக் - ௨௬.
குழைக்கின்றநல்குரவுகொண்டேனைவாவென் - - *
றழைக்கின்றதுபோனின்றாட்டம் - தழைக்கின்ற - ௨௭.
சிங்காரவெள்ளைச்செயடாலுங்கண்டிதுவே - - *
எங்கோனரண்மனையென்றெய்தினேன் - துங்கப் - ௨௮.
படையாற்றிருடர்பயத்தாற்கொடையால் - - *
அடையாதவாசலுக்குளானேன் - தடவிகட - - ௨௯.
காந்துத்தழற்சிறுகட்காரானைநிற்பவது - - *
ஏந்துகொம்பைக்கண்டுபகீலென்றுமனம்,சோர்ந்துநான் ௩௰
வெல்லவிட்டபூண்முலையாண்மென்முலைமேலென்மனதைச் *
செல்லவிட்டேன்மெள்ளத்திருப்பினேன் - செல்வமுதல் ௩௧.

வாசலுக்குண்மன்னர்வருவாரும்போவாரும் - - *
சேமசெயெனுஞ்சந்தடிக்குட்சிக்கினேன் - வீசுகிற ௫௨.
பட்டைக்கம்புக்குப்பயந்தேனைப்பின்பற்றிவந்த - *
மொட்டைக்கலியல் முடுக்குண்டான் - கிட்டப்போய் ௫௩
அத்திரேனென்கொல்லவோவெயாரென்றுரைப்பாநான் - *
வித்துவானென்றுசொன்னேன்விடுவிட்டார் - மொய்த்தம
[ணிப் ௫௪.

[கொலுச்சிறப்புக்கண்டமைகூறல்.]

பத்திவிலாசப்பவளக்காற்போதிகைப்பூ - - *
வைத்தகனகமணிமண்டபத்தில் - இத்தகிரி - - ௫௫.
வாளலோகம்புரக்குமால்பெரியநாகேந்த்ர - - *
கூளபூபாலன்கொலுவாகத் - தோளிற் - - ௫௬.
செயமாதுகூத்தாடத்திங்கண்முகமேற்பங் - - *
கயமாதுதன்கருணைகாட்டக் - கையிலேந்து - - ௫௭.
தெய்வடித்தவாள்செவிக்குநேராகநின்றெனக்கூண் - *
எவ்விடத்தையாசொல்லெனக்கேட்பச் - செவ்வியபூஞ் ௫௮.
சந்திரகாவித்தலைப்பாகைமேற்கவிகை - - *
சந்த்ரோதயகாந்திதான்காட்ட - அந்தரமும் - ௫௯.
திக்கனைத்துஞ்சுற்றச்சிறகடிக்கொள்கீர்த்தியைப்போல் *
மிக்கிரட்டைப்பாவாடைவீசிநிற்கச் - செக்கர் - ௬௰.
அவிரொளிரத்நாங்கியடுத்திருபால்வீசும் - - *
கவரியுபயநிறங்காட்டக் - கவலைபடும் - - ௬௧.
சொற்காட்டுமொன்னார்தொழுதுவிழுந்துகெஞ்சிப் - *
பற்காட்டுஞ்சென்னிபதித்தமணி - முற்காட்டும் - ௬௨
சாமித்துரோகரைப்போற்றண்டைமுகப்பில்வெற்றிச் - *
சோமத்தலைபோலச்சோதிவிட - வீமரண - - ௬௩.
தீரதுரைமக்கள்செயமந்திரிமாரும் - - - *
வீரதளகர்த்தர்களும்வேந்தர்களும் - பார்மதிக்கும் - ௬௪.
ஸ்தானபதிகளும்ப்ரசண்டநியோகிகளும் - - *
நானூலுந்தேர்ந்தநாவலரும் - கோலமுறைமைக் - ௬௫
கிந்தவகைக்கிந்தவகையின்பந்தருவதென்ன - - *
வந்துபாராசர்மனுக்கேட்பச் - செந்திருவாழ் - - ௬௬

துய்யவதனசந்த்ரசோபைநறுந்தெள்ளமுதைத் - *
தையனல்லார்செங்கட்சகோரமுண்ணக் - கைகுவித்து. ௪௭.

வாரிட்டராணுவரிசையாய்நிற்கவெதிர் - - - *
காரிட்டயானைநின்றுகாதாட்டத் - தாரிட்டுப் - - ௪௮.

பொன்னின்முகப்பூட்டுப்பூட்டிநிரைத்தடில்லி - *
வன்னப்பரிகளைத்துவாவிநிற்க - எந்நேரம் - - ௪௯.

கூடுஞ்சனுஜியக்காரர்கோடிசெயத் - - - *
தேடுங்கணஞ்சருவைகாரர் - சோடிட்டுத் - - ௫௰.

தத்தரமாய்க்காலிலிட்டதண்டைசளுங்கேடயமும் - *
கத்தியுமாய்வந்துநின்றுகைகுவித்துச் - சித்தய்வரச் - ௫௧.

சிங்களத்தைவெட்டிச்சிறைபிடிக்கவோநாங்கள் - *
வங்களத்திலேகலகம்வைக்கவோ - பங்கமில்லா - ௫௨.

வல்லத்துக்கோட்டையைப்போய்வாங்கவோவாங்காத - *
கொல்லத்தைக்கொள்ளையிடுக்கொள்ளவோ - மெல்லப்போய்

சொல்லையாவென்னத்துடிமணியக்காரர்பணம் - [௫௩.
செல்லும்வரவுஞ்செவிக்கேற்ற - நெல்லுநிதி - ௫௪.

ஆயக்கமுஞ்செலவுமாதாயமுங்கழிவும் - - *
வாயிற்கணக்கர்வந்துவாசிக்கத் - தேயத்துக் - ௫௫.

கோவேலைவாசகத்தைக்கூறுவார்தாமெழுதி - - *
ஏவோலைக்கொப்பமிடச்சொல்லத் - தாவித் - ௫௬.

தகருந்தகருந்தலையுந்தலையுந் - - - *
தகருந்தகருமெனத்தாக்க - விகடநட - - ௫௭.

மல்லராய்முற்பகையுமல்லராய்க்கட்டிவிழு - - *
மல்லராய்க்கைகுவித்துவாங்கிநிற்ப - வெல்லக் - ௫௮.

குறும்புள்ளாயுங்கைக்குறும்புள்ளாய்க்கோபக் - *
குறும்புள்ளாய்ப்பாய்ந்துகுதிகொள்ளப் - பறங்கிகளும் ௫௯.

சோனகருந்தந்ததுரிதவராகனிது - - - *
சீனர்வரவிட்டசிவிகையிது - யானைகட்டி - - ௬௰.

மிண்டுகொண்டமைசூர்மேல்வேட்டைபோய்நம்முடைய *
தண்டுகொண்டுவந்ததனங்களிது - மண்டலிகர் - ௬௧.

இட்டதிறைகளிதுபாராக்கென்றுசொல்லிக் - - *
கட்டியர்கொண்டாடக்கனபேரி - கொட்டரண - ௬௨.

மல்லாரிகோட்டைவகோபிலமால்கோயிலா *
றெல்லாருமோர்பாலினிருப்ப - நல்லமிர்த ௬௩.
போசனுங்கூளபூபாலன்சமுத்திரத்து *
மாசனமுமன்றுடிமங்கலத்து - மாசனமும் ௬௪.
அத்தலக்குண்டுமகாசனமுமாற்றாராம் *
அத்தலத்திலவைதிகநூலந்தணரும் - வித்வசெனர் ௬௫.
பக்ஷமுறுமெங்கோன்பவிசும்பலன்களுமொன் *
றக்ஷயமாமென் றக்ஷதைவழங்க - ரக்ஷகனும் ௬௬.
கோரசிங்கரூபவுக்ரகோதண்டபாணியைப்போல் *
வீரசிங்காசனத்தில்வீற்றிருந்தான் - சூரியன்முன் ௬௭.
பங்கயம்போலானேன்பரபரனைச்சென்றெதிரே *
செங்கைதனையேந்திச்செயமென்றேன் - இங்கே ௬௮.
இருமென்றெனையணிடங்காட்டப்பெற்றேன் *
அருகிலிருந்தேன்மகிழ்ச்சியானேன் - கருணைபுரிந் ௬௯.
தென்மேல்விழிவைத்தானெங்கோன்குறிப்பறிந்து *
பொன்மேவும்பெருஞ்சைப்புரந்தரா - மன்னு ௭௰
நிகளங்காமல்லாநிலைக்கோட்டைராயா *
அகளங்காவாளுக்கபிமா நகைமுகப்ர ௭௧.
தாபாகலிகோபாசதுராவிருதுபண்டு *
பாபாவலக்கவம்சபாக்யகுல - தீபா ௭௨.
சுமுகப்ரமுகலளிதசுகுணகுணரவியனைய *
சமுகநகைமுககமலதளநயனா - அமிர்தரச ௭௩.
மதுரவிதவசனமிர்கமதமெழுதுபுயசைல *
சதுரதடகடகரடசமரகரி - உதயகெரு ௭௪.
விதநடனபரிநகுலவிகடமிடுமகுடமுடி *
அதிரவடிவருடுசரணடலபய - அதுலகுல ௭௫.
சந்திரசிந்துரசந்தனகுங்கும *
மந்தரகொங்கைமடந்தையர் - சுந்தர ௭௬.
கல்விப்பெருங்கடலேகற்பகக்கன்றேகமலச் *
செல்விக்குவாய்த்ததிரவியமே - வெல்லுமதக் ௭௭.
கூன்கோட்டியானைக்குறுகாமனுங்காட்டு *
மான்கூட்டஞ்சாடும்வரிப்புலியே - மீன்கூட்டம் ௭௮

பாரிக்குறநிவந்தபன்றிமலைச்சாரலிலே - - *
ஆதிக்கஞ்செய்திருக்குமாளிகையே - ஓதுபகை - ௭௯
வீரமண்டலீகரொனும்வேழங்களைவிழுங்கும் - - *
பாரகண்டபேரண்டபக்ஷியே - சேரலராய் - - ௮௰
அண்டிப்பொருவோரரிக்குலத்தைவாளுகிரால் - *
தண்டிற்கிழிக்குஞ்சரபமே - திண்டிறலவேற் - ௮௧
போசேந்த்ராசக்ரபுவனேந்த்ராராஜாதி - - *
ராசேந்த்ராதினஜனரக்ஷகர் - வீசுதிரை - - ௮௨
ஆற்றிலேநாலுமனுநின்முன்பொன்னூறும் - - *
ஊற்றிலேயாறுமுடையானே - எற்றமுள்ள - - ௮௩
பத்தாமொவ்வொன்றுப்படைக்குந்தலையூராம் - - *
நத்தாருமொன்பதூர்நாயகனே - மொய்த்தகடல் - ௮௪
ஒப்பத்திரண்டதளமுள்ளசதுரங்கங்கள் - - *
முப்பத்திரண்டுபெற்றமொய்ம்படனே - இப்புவியில் ௮௫
அண்டலரைவெல்லுமறுபத்துநாலுமன்னர் - - *
கண்டசெயதுங்க்ரணகங்கணனே - மிண்டுகொண்டு - ௮௬
சண்டைக்குடில்லித்தளம்வந்தாலும் - - *
கண்டுமலையேறுதகண்டனே - தண்டஜய - - ௮௭
தண்டனேகாரியவுத்தண்டனேசூரவே - - *
தண்டனேவீரியகோதண்டனே - தண்டள்வத் - ௮௮
தாரனேசற்குணவிஸ்தாரனேகற்றவர்க்கு - - *
தாரனேயற்றவர்க்காதாரனே - ஆரமுத - - ௮௯
சோமனேயன்னசத்ரசோமனேகற்பகப்பூங் - - *
காமனேவிற்கரும்புக்காமனே - நாமகள்சேர் - ௯௰
பெஞ்சைநகர்ச்சிந்தமனற்பேறேசசற்கால - - *
மஞ்சைநிகருந்த்யாகவள்ளலே - அஞ்சித் - - ௯௧
தொழுதுங்கவேத்தருக்குத்துள்ளுசீட்டொப்பம் - *
எழுதும்பெரியநாகேந்த்ரா - எள்ளியோர் - - ௯௨
கரங்கள்விரித்தேதற்கக்கன்றுகண்டவாபோல் - - *
இரங்கும்பெரியநாகேந்த்ரா - வரங்கள் - - ௯௩
செருக்குமதரூபம்போற்சிங்காசனத்தில் - - *
இருக்கும்பெரியநாகேந்த்ரா - பருக்கும் - - ௯௪

கழைக்கும்பகம்பமதயானைவீரிட் *
டழைக்கும்பெரியநாகையா-தழைத்தபுகழ்க் ௯௫
கூளமகிபன்குமாரதுரைச்சிந்தமனும் *
வாளபயசோதரவசீரனே-நீள்சகல ௯௬

[தன்வித்தை அரங்கேற்றினமைகூறல்.]

சம்பனுவென்றுதமிழ்ப்பாடினேன்தமிழிற் *
கம்பனுமென்றார்கவிராஜர்-சொம்புபெறக் ௯௭
கட்டாகநூறுகவிசொல்லினேனங்கேயென் *
அஷ்டாவதானமரங்கேற்றினேன்-அஷ்டாங்க ௯௮
யோகக்காவித்துகிலோருள்ளமகிழ்ந்தமிர்த *
பாகமெனச்சொல்லப்பண்ணினேன்-த்யாகநிதி ௯௯
என்னும்பெரியநாகேந்த்ரனகளங்க *
மன்னன்திருவாய்மலர்ந்தருளி-என்னைக் ௱
கவிச்சக்ரவர்த்தியென்றான்காவலா நீயே *
புவிச்சக்ரவர்த்தியெனப்போற்றச்-செவிக்குநல்ல ௱௧

[வெகுமதிசெய்தமைகூறல்.]

முத்துக்கடுக்கனொடுமுன்கைதனக்கிணங்கும் *
ஹஸ்தகடகம்ரத்நஹாரமணிக்-கொத்துச் ௱௨
சரப்பணிதும்பிப்பதக்கஞ்சாலுவைபொற்காந்தி *
பரப்பியிடுபொற்சரிகைப்பாகை-தரித்தருள்ஸ்ரீ ௱௩
தாம்பரங்களீந்தான்தருப்போலவனெனக்கங் *
காம்பரிசிலீயுமதற்குமுனே-மேம்படுபேர் ௱௪
நீட்டுபுகழ்க்கல்லூர்வாழ்திப்பணவேளென்தலைக்குச் *
சூட்டவொருமுத்துத்துராயீந்தான்-தாஷ்டிகோத் ௱௫
தண்டனெனுங்கூளேந்த்ரன்தம்பியாஞ்சிந்தமனோர் *
கண்டசரமீந்தான்கழுத்துக்குக்-கொண்டலெனும் ௱௬
முத்துராயன்கொடுத்தான்முன்னணிசுமாக்கியணன் *
பத்துவராகன்பெறவோர்பாகீந்தான்-சித்தசனும் ௱௭

ரங்கப்பன்கைக்கொலுசுநல்கினான்மோதிரமென் - ✱
செங்கைவிரலுக்கணிந்தான்சிந்தமவேள்-தங்கவளை ௱௮.
ராசகோபாலையனல்கினான்சீர்கொள்முத்துப் - - ✱
போசனொருமுத்துவடம்பூட்டினான்-பேசுபுகழ்ச் - ௱௯
சாந்தபூபன்கொடுத்தான்சாலுவைநல்னாகரத்நம் - ✱
ஈந்தான்கெடிநாகனென்கையில்-வாய்ந்தபுகழ் - ௱௰.
நல்லயனாணச்சுநடைப்பரியீந்தானுலகம் - - ✱
சொல்லும்பணிக்காயன்சொக்கலிங்கம்-மல்லிகைப்பூத்.
தையலங்கியொன்றெனக்குத்தந்தான்பெரியதம்பி - ✱
தூய்யவெள்ளிக்குண்டுசொக்காய்தந்தான்-பொய்யுரையாக்.
கூளக்கணக்கன்மணிகுண்டலந்தந்தானிரண்டு - - ✱
தோளிற்குணுக்களவாய்த்தூங்கவே-வேளைக் - - ௱௰௩
குதவியதம்பான்கொடுத்தானென்பதுபொன்பட்டுச் - ✱
சதுரன்கைலாசதயாளு-புதுவயிரத் - - ௱௰௪.
தண்டோட்டிதந்தான்சவாதுப்பரணிதந்தான் - - ✱
கொண்டசொக்கலிங்கன்கொடுத்தானோர்-முண்டாசு ௱௰௫
சட்டமிடுஞ்சொக்கலிங்கன்தந்தான்கணையாழி - ✱
கட்டழகன்பாசிபந்துகட்டினான்-பட்டை - - ௱௰௬
யரைஞாண்தந்தான்பொன்னரைச்சட்டைதந்தான் - ✱
வரிசையாம்ராமமகிபன்-முருகுமுத்து - - ௱௰௭
சின்னானுதவினான்தீரன்வடகூளன் - - - ✱
பொன்னால்விருதுதண்டைபூட்டினான்-பின்னெறிக்குத்
தாயித்திராமனன்றுதந்தான்திருமலையன் - - ✱
நேயத்தாற்பொற்பூநிசாறுதந்தான்-தூயதுணைக் - ௱௰௯
காமனீந்தானற்கறவையைந்துகண்டையிட்ட - ✱
சோமனீந்தானரைக்குச்சோடாகச்-சோமனெனும் ௱௨௰.
சோலைசிவப்புத்துப்பட்டிதந்தான்மாடன் - - ✱
பாலுக்குக்காராம்பசுத்தந்தான்-மால்குழந்தை - ௱௨௰௧

வேலனெனக்கிரண்டுவெள்ளையெருதாட்மேகம் - *
போலக்கொடுத்தோட்டிப்போவென்றான் - சீலிபூ - ௱௨௨
பாலன்கொடுத்தானோர்பச்சைவடஞ்சோடங்கி - *
நாலுமுடிப்பொக்கநல்கினான் - சீலனெனும் - ௱௨௩.
நல்லமருதன்கொடுத்தானல்லகுதிரைமறி - - *
கல்விதெரிசிக்கணனென்கண்குளிரக் - கொல்லத்துப் ௱௨௪
பச்சைக்கபாய்தந்தான்பாரியொத்தகாமியங்கே - *
மெச்சியெனக்கிரண்டுமேதிதந்தான் - உச்சிதமாக் - ௱௨௫
கூதலுக்குப்போர்வைதந்தான்கொண்டபூபன்றுலக - *
நாதஞ்சகலாத்துநல்கினான் - மாதங்கக் - - ௱௨௬.
கட்டிகொடுத்தனுகக்கவண்டன்குருவா - - *
ரொட்டிகொடுத்தானற்குரொட்டிப்பு - தட்டிலிட்டு ௱௨௭.
நாழிமுத்தைமுத்தையவேணல்கவரதப்பனொரு - *
தாழிவிலையைப்போட்டான்சமுகத்தில் - வாழியென - ௱௨௮.
ரங்கையனிந்தானங்கோரத்நகண்டிராமையனுந் - *
துங்கன்கொடுத்தான்பொன்தொண்ணூறு - திங்கண்முக
வீரப்பெருமாள்விரலுக்குவச்சிரக்கல் - - - *
சேருற்றபொன்மோதிரந்தந்தான் - கோர - ௱௩௰
அனுமத்துவசருங்கருட்டாலர் - - - *
கனவிருதுசிங்கடாற்காரர் - எனவாழும் - - ௱௩௧.
எல்லாருஞ்செம்பொனிறைத்தாரையானைனுஞ்சூழ் - *
நல்லாசனன்பெரியநாகேந்திரன் - செல்வத் - ௱௩௨.
துரையெனக்கங்காட்டினான்சொர்ணபிஷேகம் - *
வரையெனத்தந்தானோர்மதமா - தரளக் - - ௱௩௩
கவிகைதந்தான்வெள்ளைக்கவரிதந்தான்செம்பொற் - *
சிவிகைதந்தான்காந்திசிறந்த - ரவிபோல் - - ௱௩௪
இருட்டகற்றுதீவட்டியீந்தான்மதிபோற் - - - *
சுருட்டிதந்தான்தந்தான்றுவசம் - பெருந்தகில - ௱௩௫

ஊர்தந்தானும்பளிக்கையூர்தோறும்பண்ணைவைக்க - *
ஏர்தந்தான்வாழ்வுக்கிடத்தந்தான் - ஆர்தந்தார் - ௱௯௬.

இந்தத்தியாகமிவனைப்போல்வாவியர - - - *
விந்தத்தியாகவந்தமெல்லியலே - இந்தவிதம் - - ௱௯௭.

[விறலியைத்தூதுவிடுத்தமைகூறியது.]

என்செய்தியாதிதொடர்ந்தெல்லாமுனக்குரைத்தேன் - *
பொன்செய்தவெம்மூர்க்குப்போயினிநீ - மின்செய்த ௱௯௮.

சிற்றிடையாளாகியவென்தேவியாரைக்கண்டு - - *
நற்றிறஞ்சேர்வீணைநயப்பாடி - மற்றவளுக் - - ௱௯௯.

கென்குறையைமெள்ளவியம்பியெதிர்சொல்லுமந்தப் - *
பொன்குறையுங்கேட்டுடல்போக்கியே - நன்குறுமென். ௨௱

ஆசைமனையாட்டிதனக்கையங்காரின்னுமொரு - *
வேசைமனைக்கேகுவரோவிட்டேனவா - லோசனையுட் ௨௱௧

கொள்ளாமலென்சபதங்கூறிமுன்னைக்குற்றநினைந் - *
தெள்ளாமற்கற்பினியல்போது - உள்ளாளப் - ௨௱௨.

பண்பாடியுட்காமபாணம்படச்செய்து - - *
நண்பாடியென்வரவைநன்கேற்றுக் - கண்பார்க்க - ௨௱௩.

ஓகையாய்முன்போலுறவாக்கச்செல்வாழி - - *
தோகைவிறலிநீ - தூது. - - - - ௨௱௪

ஆகக்கண்ணி - ௨௱௪.

விறலிவிடுதூது - முற்றிற்று.

முற்றும்.

